பேரெனுந்தொகைமருவு பூதவெள்ளத்தினடு பிறழ்மணித்தேரிலேறிப்
பெயர்த்தலையெறிந்திடு கடற்றலைநிசாசரர் பிணக்குவைபடத்தொலைத்துத்
தீரவரிதாஞ்சினந் தவிர்செருத்தணிகையிறை சிறுதேருருட்டியருளே
சிவஞானசித்திதர வருஞானசத்திதர சிறுதேருருட்டியருளே. (௫)

மங்குலைத்தீண்டுகொடி மணிமாடமுடிதவழு மதியிளம்பிள்ளைமடவார்
மடிமீதுசிறுகுழவி யெனவுவந்தேறலு மகிழ்ந்துமணிமுறுவல்பூத்துப்
பங்கயமலர்க்கரத் தேந்திவாய்முத்தாடி பஞ்சணையின்மீதுசேர்த்திப்
பாலொடுபழங்கனிக் கூதவிமுகமன்சொலி பரிந்துவிளையாடிவாவென்
றங்கணகலும்படிவிதித்திடுவிருப்பினு லருதினங்கலைகள்வளரு
மழகியசெருத்தணிகை வரைநினைந்தவர்வினை யறுத்தருளுமாறுமுகவா
செங்கதிர்த்தேர்நாண வம்புலித்தேர்மீது சிறுதேருருட்டியருளே
சிவஞானசித்திதர வருஞானசத்திதர சிறுதேருருட்டியருளே. (௬)

பேய்த்தேரைநீரெனக் கொண்டுழலுமிரலையிற் பிணித்திடுகயிற்றிலரவப்
பிராந்தியுறுமொருவனிற் சுத்திசுழிரசிதப் பிந்தடைந்திடுபேதையிற்
பூத்தேரினுறுவாழ்வு மெய்யென்றுகருதியான் பொறிவழிச்சென்றுபஞ்சப்
புலனையுமருந்தியா னெனதெனுமகந்தையாற் புன்பிறவியணுகுமலநோய்
நீத்தேர்பெறுந்திரு வடித்தாமரைப்போதி னீழறந்தானந்தமாம்
நித்தபரிபூரண சிதாகாசவெளியிலே நிலைபெறவிடுத்தமுருகா
தேய்த்தேமுடிக்கண்மதி தவழ்தணிகைவெற்பின்மேற் சிறுதேருருட்டியருளே
சிவஞானசித்திதர வருஞானசத்திதர சிறுதேருருட்டியருளே. (௭)

காமக்குரோதமிகு லோபமொடுமோகமுங் கருதிமதமாச்சரியமுங்
கட்டிப்பிணித்துநிரை யத்திலிடுமைம்புலக் காதலுமறத்துறந்து
தாமுற்றிடுந்துற வறத்தினிலைதவறாது தழைகானகத்தடைந்து
சரகருந்திப்பஞ்ச தழலிடையிருந்துநற் றவமியற்றிடுமாதவர்
தோமற்றசிந்தனைக் கெட்டாதநின்றிருத் துணைமலர்ப்பதநீழலிற்
றுயரறவிருத்தியெனை யாண்டருள்செருத்தணி சுடர்க்கிரியமர்ந்தமுருகா
சேமித்தமறைநெறிக ளெங்கணும்விளங்கிடச் சிறுதேருருட்டியருளே
சிவஞானசித்திதர வருஞானசத்திதர சிறுதேருருட்டியருளே. (௮)

வேறு.

மனத்தொடுமொழியுட லொருப்படுமடியவர் வணக்கொடுமடிபேண
மலத்தொடுமிருவினை யகப்படுமுயிரருள் வசப்படுதிறநாடிச்
சினத்தொடுமயல்விழை வளித்திடுபொறிபுலன் சிதைத்தறிவினிலோவாச்
சிவத்தினையடைதர வவத்தைகள்கழிவுறு செயற்கையையெளிதீயத்
தனித்தொருமயின்மிசை யிருத்தியகழலொடு தவத்தினர்புடைசூழச்
சலிப்பறவெதிர்வரு மருத்திகொளறுமுக தலத்துயர்குருநாதா
உனக்குறுவலவனு மனத்ததிசயமுற வுருட்டுகசிறுதேரே
உலப்பறுவளமலி செருத்தணிமலையவ னுருட்டுகசிறுதேரே. (௯)

தரைத்தலைமுனிவர்க ளுரைத்திடுசெருக்கி கடைத்தபணிருகாதிற்
றமிழ்க்கடலுறவிதி திணைத்துணையறிவிலி சலிப்பறுமிழைவாலே
விரித்திடுபுகழ்பெறு பிள்ளைத்தமிழொருசத விருத்தமுமினியேறும்
வெளிற்றுருவுறுகரி யிசைக்குலவியகழல் வெறிக்கணுமுறலாலே
குருப்பொலியிமையவ ரளித்திடுமெமுதொடு குறத்தியர்தினைமாவுங்
குளிர்ப்புறநுகர்தரு களிப்பொடுமகிழ்பெறு குலப்புதுமலர்வாயா
வொருத்தருங்காறு செருத்தொழில்வலருக ளுருட்டுசிறுதேரே
யுலப்பறுவளமலி செருத்தணியலையவ னுருட்டுகசிறுதேரே. (க௦)

சிறுதேர்ப்பருவம்-முற்றிற்று.

ஆக பருவம் க௦-க்கு திருவிருத்தம் க௦௦.

---

சாலி வாகன சகாத்தமோ யிரத்தெழு நூற்றொரு
டேழு மாண்டிரு பத்துநா ளனைதுல் மதியிற்
கோலுங் குண்டையூ ரிற்றிளிற் பிள்ளைத்தமிழ் கொடுத்தான்
மூல வெற்பனுக் கடியருங் கந்தப்ப முனியே.

---

கணபதிதுணை.

## திருத்தணிகைச்சந்நிதிமுறை.

### இரண்டாவது

# தணிகை ஐங்கரமாலை.

கலித்துறை.

உலகத்தைத் தந்த வுமையாட ரும்பிள்ளை யும்பர்க்கெல்லாந்
திலகத்தை யொத்தவன் சிந்தூரமென்னுந் திறலாகத்தன்
கலகத்தைநீக்கிய மூஷிகவாகனன் கர்த்தன்முன்னோ
னலகற்றசெல்வந் தருவான்செருத்தணி யைங்கரனே. (க)

பாபச்சகாய ரிடத்தேயுறவினைப் பண்ணியென்றுஞ்
சோபச்சகாய முறுமனின்பாதத் துணையளிப்பாய்
கோபச்சகாய னெனுமாமுகவனைக் கொன்றறிந்த
வாபச்சகாய முதல்வாசெருத்தணி யையங்கரனே. (உ)

சொன்னமும்பிம்பமு மேலானவாழ்வுந் துரைத்தனமும்
இன்னமும்வேண்டிய வரங்களுந்தந் தெனையேபுரப்பாய்
கன்னலும்பாரு மவலுமென்றுண் டையுங்காதலுட
னன்னமுமீயு மடியரைக்காத்திடு மைங்கரனே. (௩)

மானார்கலவி மயக்கத் திருளா மதிமயங்கி
யூனாருடலபி மானத்திலிங் குனைமறந்தேன்
றேனார்கமலத் திருவடிகாட்டிச் செயமளிப்பா
யானாவறிவு தருந்தணிகாபுரி யையங்கரனே. (௪)

கல்லுமுருகுஞ்சொற் காரிகையாரின்பங் காதலித்து
வெல்லுமரசுங் குறையாதசெல்வமும் வேண்டிநின்றேன்
சொல்லும்பொருளு மெனநிறைந்தெங்கணுந் தோன்றிநிற்பா
யல்லும்பகலு மறவேனெனக்கரு ளைங்கரனே. (௫)

மானைப்பொருவிழி மங்கையர்பார்வை வலையுட்சிக்கி
யேனையறிவு கலங்கிநின்றேனிடர் நீக்குவையோ
சேனையரக்க ரொடுமாமுகனைச் செருவில்வென்ற
வானைமுகத்தவனே தணிகாபுரி யையங்கரனே. (௬)

வண்டரொடுந்திரிந் துன்றிருப்பாத மலர்மறந்து
தொண்டருறவினை நீங்கிநின்றேன்கதி துன்னுவனோ
மிண்டரெனுமவு ணக்குழுவைத்தெறும் வித்தகமே
யண்டர்பணியுந் திருத்தணிகாபுரி யையங்கரனே. (எ)

கல்லாதபுல்லரைக் கூடியுன்பூசனை கையகன்று
பொல்லாதவீண்பழி பூண்டேன்பிழைகள் பொறுத்தருள்வாய்
வில்லாரும்பொன்மலை மேற்பாரதமுன்ன மேயெழுது
மல்லார்களத்திறை மைந்தாசெருத்தணி யையங்கரனே. (அ)

வஞ்சப்பிறப்பி லலைந்துநின்பாத மலர்துறந்து
பஞ்சப்புலன்வழி போய்த்திரிவேன்பரம் பாலிப்பையோ
கஞ்சக்கிழவன் முதலானதேவர் கருத்திலுறை
யஞ்சக்களத்திறை மைந்தாசெருத்தணி யையங்கரனே. (கூ)

நீங்காதமாயைப் பெருங்கடல்வீழ்ந்து நிலைகுலைந்து
தீங்காயிரமும் புரிவேனையாளுந் திறம்புகலா
யோங்காரந்துள்ளொளி யானவனேயன்ப ருள்ளிருக்கு
மாங்காரவேர்பறித் தாளுஞ்செருத்தணி யையங்கரனே. (கய)

உண்டத்தையே பின்னுமுண்டு முடித்தத்தையேயுடுத்தும்
கண்டத்தையேபின்னுங் கண்டேயுழலுங் கயவனையாள்
பண்டத்தையேநிகர் சொல்லுமையாள்பெற்ற பாலகனே
அண்டத்தையாளுந் திருத்தணிகாபுரி யையங்கரனே. (கக)

மண்ணுளவேண்டினும் பாதலமாள மதித்திடினும்
விண்ணுளவேண்டினு முன்னருளேயன்றி வேறிலைகாண்
கண்ணுளனேசெழுங் கற்பகமேவெங் கயமுகனே
யண்ணுமலையருளுந் தணிகாபுரி யையங்கரனே. (கஉ)

கையாற்றொழுதிலன் கண்ணாலுன்மேனியைக் கண்டறியேன்
பொய்யாமுடலெடுத் தேந்திழையார்மயல் பூண்டுநின்றேன்
மெய்யாகியதெய்வ நீயன்றிவேறிலை மேதினிமே
லையாதிருத்தணி காசலமேலுறை யையங்கரனே. (கங)

காணவும்வேண்டுநின் பாதாரவிந்தத்தைக் கண்டுதுதி
பேணவும்வேண்டு மொழியாதவின்பப் பெருங்கடல்யான்,
பூணவும்வேண்டு முனையேவழுத்திய புண்ணியருக்
காணவந்தீர்க்குஞ் செருத்தணிமால்வரை யையங்கரனே. (கச)

இத்தனைநாளுனை யேயிரந்தாலு மிரங்கியருள்
வைத்தெனையாளும் வகையுரையாயிது வண்மையதோ
முத்தனையாய்செம் மணியனையாய்பச்சை மூங்கிறந்த
வத்தனையேவலஞ் சூழ்தணிகாசலத் தைங்கரனே. (௧௫)

உன்னையருச்சிக்கி லெல்லாக்துயரு மொழிந்துசெல்வ
மன்னுமெனுமறை வாக்கியமெய்யெனில் வந்தடுத்த
வென்னையடியரிற் கூட்டாதிருப்ப திழிதகவே
யன்னையுமையருள் செல்வாசெருத்தணி யையங்கரனே. (௧௬)

நொந்தகனைந்துனை யேநினைத்தாலுங்கண் ணோக்கருளி
வந்தகனைந்திட லென்றெனைத்தேற்றிநல் வாழ்வளிப்பாய்
கந்தகந்தோன்றிய மான்மருகாவெங் கயமுகனு
மந்தகனைத்தடிந் தாய்தணிகாபுரி யையங்கரனே. (௧௭)

நின்னருளெய்திடில் வாசவனுருவ னீசனுமே
யுன்னருளின்றெனில் வாசவனீச னுருவெடுப்பா
னின்னதுகண்டுனை யேயடுத்தேன்வர மீந்தருள்வா
யன்னமுஞ்சொன்னமு மீதணிகாபுரி யையங்கரனே. (௧௮)

ஏகுவையோவர மீயாதிருப்பை கொலோவெனயான்
மாகவலைப்பட லாமோவெனக்குநல் வாழ்வளிப்பாய்
பாகுவிலைபயஞ் சொல்லுமையாள்பெற்ற பாலகனே
யாகுவின்மேல்வருந் தெனறணிகாபுரி யையங்கரனே. (௧௯)

கண்டிலையோவுன் னடியேன்படுந்துயர் கண்டுவர
முண்டிலையென்றொரு சொல்லாகிலும்வந் துரைத்திலையோ
தொண்டலன்றோவுனக் கெந்நாளுமன்பின் றொடர்பிலன்றோ
யண்டிலையோவுயிர் தோறுஞ்செருத்தணி யையங்கரனே. (௨௦)

கொன்றேயுயிர்க்கொலை செய்தாலுமென்றன் கொலைப்பழியை
யின்றேதவிர்த்துன் னருள்புரிவாயென் றிரந்துநின்றே
னன்றேபுரியினுந் தீதேபுரியினு நானிலத்தி
லன்றேயுயிர்த்துணை யாகுஞ்செருத்தணி யையங்கரனே. (௨௧)

மெய்யானதெய்வமென் றுன்பாதநெஞ்சில் விடாதிருத்திப்
பொய்யானசெல்வமும போக்கிநின்றேனது போயிடினுஞ்
செய்யானசிந்தையி லுண்டாங்கவலையைத் தீர்த்தருள்வா
யையாநந்த னருள்தணிகாபுரி யையங்கரனே. (௨௨)

கொடுத்தவர்க்கேயின்னுஞ் செல்வங்கொடுத்தனை கும்பிட்டுன்சீர்
தொடுத்தவற்கேயருள் செய்யாதிருப்பதென் சொல்லியிடாய்
கெடுத்தவர்க்கேவருங் கேடென்பரால்மதி கெட்டவர்க
ளடுத்தவர்க்கேயருள் செய்யுஞ்செருத் தணி யையங்கரனே. (௨௩)

காலோகடுத்திட வோடிவந்தேனுனைக் கைதொழுதேன்
மாலோமனத்திற் பெரிதுடையேனுன்னை வந்தித்தென்றும்
பாலோடனமும் பருகேனிரவினிற் பாயுறங்கே
னாலோசனைசெய்ய வேண்டாஞ்செருத்தணி யையங்கரனே. (௨௪)

கத்திமுகத்தி னடிப்பவர்போலுனைக் காதலித்தோர்
பத்திமுகத்தி லெழுஞ்சுடரேயருட் பார்வையருள்
சந்திமுகத்திரு கண்மணியேசிவன் றன்மகனே
யந்திமுகத்தவனே தணிகாபுரி யையங்கரனே. (௨௫)

சாவேதனைசொல்லத் தான்முடியாது சநநமுறு
மாவேதனையுமம் மாத்திரமேயிடை மன்மதனெய்
பூவேதனைசொல்லப் போமோவறுமையிற் புக்குழந்து
மாவேதனைதவிர்த் தாள்வாய்செருத்தணி யையங்கரனே. (௨௬)

கொம்புலவும்புழுக் கூடாமுடலங் கொடுஞ்சமர்செய்
செம்புலமாக்கித் திளைத்தினம்போர்செய்யுஞ் சித்தசனார்
வம்புலவுங்கொங்கை யார்மயல்பூட்டி மயக்கியிடு
மைம்புலனென்வச மாமோசெருத்தணி யையங்கரனே. (௨௭)

வேளாக்கியமயல் யாவையும்போக்கி வினையனைத்துந்
தூளாக்கிமேல்வருந் துன்பங்கணீக்கிநின் றொண்டரை
கேளாக்கியேநமன் கிட்டாமற்றாக்கிநின் கீர்த்திசொல்லு
மாளாக்கிக்கொண்டெனை யாள்வாய்செருத்தணி யையங்கரனே. (௨௮)

ஸ்ரீகண்டபஞ்சென வெந்திடும்பான்புரி தீமையெல்லா
நீகண்டனையெனின் மேலனவாழ்வு நிலைபெறுமே
பாகண்டுசொலுமை பாலாகடல்வண்ணன் பங்கயத்தோ
னைகண்டலன்பணிந் தேத்துஞ்செருத்தணி யையங்கரனே. (௨௯)

மறுகுந்துயரொடு மைந்தரில்லாமல் வருந்தியுனைக்
குறுகுங்கொடிய விடர்களைந்தினபங் கொடுத்தருள்வா
யிருகுந்தயிருறி யெட்டியுண்டோனுங் கெழின்மருகா
யறுகுந்திருமுடி வைப்போய்செருத்தணி யையங்கரனே. (௩0)

கோசாரமென்பர் கொடுவினையென்பர்செய் குற்றமென்பர்
மாசாருநாளென்பர் மாமாயைதானென்பர் மற்றிவைக
டேசாருநீகடைக் கண்ணோக்களித்திடிற் சிந்திடுங்கா
ணாசாரவீன ரறியாச்செருத்தணி யையங்கரனே. (௩௧)

இலங்காவல்வேண்டினு நேரிழைவேண்டினு நீண்டசெம்பொற்
றலங்காவல்வேண்டினுஞ் சந்ததிவேண்டினுஞ் சத்துருவின்
குலங்காதவேண்டினு முன்னையல்லாதொன்றுங் கூடரிதே
யலங்காரவேலனுக் கண்ணாசெருத்தணி யையங்கரனே. (௩௨)

வீட்டுக்கிசைந்த மனையாளுமக்களும் வேண்டியுளசீர்ப்
பாட்டுக்கிசைந்த படியுரைத்தேன்வரம் பார்த்தளிப்பாய்
கோட்டுக்கிசைந்த கரிமுகனேசெம்பொற் கூட்டந்தன்னு
ளாட்டுக்கிசைந்தவன் மைந்தாசெருத்தணி யையங்கரனே. (௩௩)

மிடியாலுயிர்படு வேதனைதானும் வினையிரண்டான்
முடியாச்சனனமு மும்மலவாதையு முற்றுமற
வடியாச்சலதி யெனுமருட்பார்வை வழங்கிடுவா
யடியாருளத்துற் குடியாஞ்செருத்தணி யையங்கரனே. (௩௪)

கவிகாரியிந்தரி செய்புதன்பொன்னவன் காரரவங்
குவிகாரியங்கள்போல் லாங்குசெய்யாதன்பு கூர்ந்தளிப்பாய்
நவிகாரியாய்விழி வல்லபையோடு நயந்திருந்து
மவிகாரியாயொளிர் தேவேசெருத்தணி யையங்கரனே. (௩௫)

தவமொருகோடி புரிந்தோர்க்கெட்டாத செந்தாமரைத்தாள்
பவமொருகோடி புரிந்தவென்னெஞ்சகம் பாய்ந்திடுமோ
சிவமொளிர்காசியிற் றுண்டிவிநாயகச் செல்வனென்றே
யவமதிநீக்கிய வாழ்வேசெருத்தணி யையங்கரனே. (௩௬)

தானந்தவம்பல செய்யேனடுநிலை சார்ந்திலேன்
ஈனந்தருமப சாரங்களேசெயு மிச்சையுளே
ஞனிந்துவீண்பழி யாலழியாதிந்த நானிலத்தி
லானந்தவாழ்வளித் தாள்வாய்செருத்தணி யையங்கரனே. (௩௭)

போகாதபாவங்கள் போக்குவிப்பாயறம் பூணவைப்பாய்
சாகாதநல்வர மீந்திடுவீரியன்பு சாரவைப்பாய்
மாகாதிபரும் வணங்கச்செய்வாயிந்த மண்ணிலுன்று
லாகாதகாரிய முண்டோசெருத்தணி யையங்கரனே. (௩௮)

மாதாவுந்தந்தையு மைந்தருஞ்சுற்றமும் வாழ்வுமுன்றன்
பாதாரவிந்தமல் லாலினிவேறொரு பற்றுமிலேன்
வேதாவும்வாசவ னுந்திருமாலும் விழுந்திறைஞ்சு
மாதாரமூலத் துறைவாய்செருத்தணி யைங்கரனே. (௩௯)

சாங்காலமுமுடல் வேங்காலமுமதிற் றங்குமுயிர்
போங்காலமுமய னீங்காதென்கரும் போதிலிவர்ந்
தோங்காலகால மெனவரும்போதெதி ரோடிவந்தே
யாங்காலமாக்கி யருள்வாய்செருத்தணி யைங்கரனே. (௪௦)

சொன்னமுந்தாநல்ல தோகையுந்தாநற் றுறைத்தனந்தா
வன்னமுந்தாபெரு வாழ்வையுந்தாசிறு மைந்தருந்தா
வின்னமுஞ்சென்ம மெடுத்தாலொருவருக் கீகையுந்தா
வன்னமுந்தாமுத்தி யுந்தாசெருத்தணி யைங்கரனே. (௪௧)

பட்டாங்குபேசும் பராமாதரிச்சையைப் பற்றறநான்
விட்டாங்குநின்கழல் சேர்வதென்றோகஞ்ச மென்மலர்ப்பூ
மொட்டாங்குவிமுலைச் சித்தியும்புத்தியு முன்பணிந்தோர்க்
கட்டாங்கயோகந் தருந்தணி புரி யைங்கரனே. (௪௨)

மீயுயர்வான்சுழல் முப்புரமீது வெகுண்டிறைவன்
மாயிருஞாலத் திருத்தேரிலேறி வரும்பொழுது
நீயிருசோடச் சொடித்தாயெனக்கண்டு நின்றுதொழு
தாயிரநாமமு மோதுஞ்செருத்தணி யைங்கரனே. (௪௩)

செம்போதுநந்த வனத்துக்குநீரென்று தேவரிறை
பைம்போதிஞலெருச் சித்திடக்காக்கையிற் பாய்ந்துசையக்
கும்போதயமுனி கும்பத்தைச்சாய்த்திடக் கோபமகன்
றம்போதியுண்டவ னேத்துஞ்செருத்தணி யைங்கரனே. (௪௪)

மோகாவிகாரத்தின் மூழ்கிக்கிடப்பினு முண்டகத்தாள்
மாகாதல்கொண்டனன் மெய்யாகப்பேசி வரமளிப்பாய்
தேகாபிமானத்தைத் தீர்ந்தேயருச்சனை செய்பவர்மே
லாகாமியஞ்செல வொட்டாய்செருத்தணி யைங்கரனே. (௪௫)

பஞ்சலங்காரப் பதமாதர்மேல்வைத்த பார்வையைநின்
செஞ்சிலம்பார்கழற் போதில்லையாதுழல் தீவினையே
னெஞ்சிலும்வீற்றிருந் தாயடியேன்பிழை நீக்கியினி
யஞ்சலென்றோளத் தகாதோசெருத்தணி யைங்கரனே (௪௬)

சந்தானங்கற்பகந் தண்பாரிசாதந் தடஞ்சினைசேர்
மந்தாரம்பைம்பொன் மலர்தேவதார மணிநிதியா
னொந்தாரிளைப்பற வேண்டிற்றெல்லாந்தரு நோக்கமெனு
மந்தாமரையருள் செய்வாய்செருத்தணி யையங்கரனே. (௪௭)

செம்பஞ்சியூட்டிய நூபுரத்தாண்மலர் சித்திபுத்தி
யும்பங்கிருபுடை மேவிடமூடிக வூர்திமிசைக்
கொம்பொன் றுமானை முகத்தொடுகாட்சி கொடுத்தளிப்பா
யம்பைந்தினோன் மைத்துனனே செருத்தணியையங்கரனே. (௪௮)

தண்டங்கரங்கொண் டெருமைக்கடாமிசை தானிவர்ந்து
சண்டன்வரும்பொழு தஞ்சலென்றுளத் தகுமொருநீ
கண்டம்பலவித மாயிருபத்தொரு காரணத்தா
லண்டம்படைத்தழித் தாளுஞ்செருத்தணி யையங்கரனே. (௪௯)

சூலமும்பாசக் கயிறும்பிடித்தெம தூதர்வந்து
காலமும்பார்த்துக் கணக்கிட்டுயிர்வவ்வுங் காலத்திலுன்
கோலமுங்காட்டிநின் பாதாரவிந்தங் கொடுத்தருள்வா
யாலமுண்டோனருள் மைந்தாசெருத்தணி யையங்கரனே. (௫௰)

நோவணங்கிளை யிருமல்குளிர்வெப்பு நோய்முடங்கூ
னூவணஞ்சேர்விக்க லாலிறவாம னயந்தளிப்பாய்
தூவணங்கூர்சங்கு முத்தந்துகிருப்புந் துன்னிடலா
லாவணமோதைக் கடலாஞ்செருத்தணி யையங்கரனே. (௫௧)

கற்பகலாத மனையாளுமக்களுங் காசினியும்
பற்பகலாயுறு மாயுளும்வேண்டிநின் பாலடைந்தேன்
வெற்பகலாவர வின்மணிராசியின் வெங்கதிரா
லற்பகலாகி யொளிர்தணிகாபுரி யையங்கரனே. (௫௨)

நம்பலனுன்றிருப் பாதாரவிந்தத்தை நாரியர்வாய்த்
தம்பலமுண்டு தடுமாறுமென்னைத் தடுத்தருள்வாய்
வம்பலங்கற்குழல் வேசையராடு மயிலினம்போ
லம்பலந்தெற்றியி லாடுஞ்செருத்தணி யையங்கரனே. (௫௩)

பூவிரைந்தேவலஞ் செய்தாலுந்தீர்த்தங்கள் புக்கிடினும்
பாவிரைந்தோதி யுனைப்பணியார்வெவ் பவமறுமோ
மாவிரைக்காந்தளங் கைநீட்டவேங்கை மலருடன்பொன்
னூவிரையும்பொன் சொரிதணிகாசலத் தையங்கரனே. (௫௪)

தங்காந்தரைத்தவிர் வேசையர்போலநின் றன்னைமறந்
திங்காந்துணையென் றிமையோர்பலரையு மேத்திநைந்தேன்
செங்காந்தள்வானிற் செலுமதியைத்தொடர் தீயாவி
னங்காந்தெழுந்து மலர்தணிகாசலத் தையங்கரனே. (௫௫)

தரைப்பாற்புரந்தர னூட்டியசோலை தழைப்பமுன்னந்
திரைக்காவிரிதந்த சீர்போலருள்வெள்ளந் தேக்கியிடாய்
வரைச்சாரல்வேட மடவார்வதன மதியினைக்கண்
டரக்காம்பல்விள்ளுந் தடஞ்சூழ்செருத்தணி யையங்கரனே. (௫௬)

இந்தனத்தங்கி யெனவுயிர்தோறு மிருந்துமென்றன்
சிந்தனைக்குற்ற துயரறியாததென் செப்பிடுவாய்
சந்தனக்கோடிந் தெறுங்கலிற்றேய்க்கவின் சார்மடவா
ரந்தனக்கோட்டி லணிதணிகாசலத் தையங்கரனே. (௫௭)

கஞ்சனைக்கண்ணனை விண்ணவர்கோனைக் கடுந்துயர்செய்
நஞ்செனத்தோன்றுசிந் தூரனைக்கொல்விற னுன்மறவேன்
றஞ்செனக்காளையர் நெஞ்சிற்புதைபொரு டன்னைமின்னு
ரஞ்சனக்கோல்கொண் டகழுஞ்செருத்தணி யையங்கரனே. (௫௮)

ஈரேழுலகும் பெயர்த்திடுமோடிகத் தேறிநின்று
யோரேழ்பவத்துழ லென்னெஞ்சமோடிக மூர்ந்திடுவாய்
பேரேழ்முனிவ ரருள்போலத்தீர்த்தம் பெருகிநித்த
மாரேழ்சுனைக ளழகாஞ்செருத்தணி யையங்கரனே. (௫௯)

பாரத்துவாசன் மகனுய்முனிவர் பயந்தவிர்த்தாய்
பேரத்துவாசம்பந் தத்தாலுழலுமென் பித்தறுப்பாய்
நீரத்துவாமதி மண்டலமீது நிலவுவெளி
யாரத்துவாதச வந்தச்செருத்தணி யையங்கரனே. (௬௦)

நல்லவரேணியன் புத்திரனுயருள் நல்கினைவீ
டொல்லவரேணி யெனுஞானமொன்றெனக் கோதியிடாய்
வில்லவரேணியின் மேற்சரந்தூண்ட வெருண்டுதுள்ளி
யல்லவரேணியைத் தாண்டுஞ்செருத்தணி யையங்கரனே. (௬௧)

நீவலங்கோட்டினிற் பாரதந்தீட்டினை நித்தலுநான்
மேவலங்கோட்டினு மேருமுற்றுந்திடம் வீட்டருள்வாய்
காவலங்கோட்டுக் கனியூகநல்கிவிண் ணுட்டரம்பை
யாவலங்கோட்டுஞ் செருத்தணிகாபுரி யையங்கரனே. (௬௨)

நிழல்காட்டியசிறு கட்கடைகாட்டியென் னெஞ்சிலிரு
கழல்காட்டி யுன்றிருமேனியுங் காட்டிக்கதியளிப்பாய்
தழல்காட்டியதினை மேய்ந்துசெங்காந்தளைத் தாழ்காரிக
ளழல்காட்டியதென வஞ்சுஞ்செருத்தணி யையங்கரனே. (௬௩)

நாமணக்குப் புக ழோதவுநின்னுரு நாடவுங்கண்
டேமணக்குங்கழல் போற்றவுமெனைகை சிறந்தருள்வாய்
பூமணக்குந்தடஞ் சாரலில்வேங்கையைப் புல்லியெழுந்
தாமணக்கும்புகழ் மேவுஞ்செருத்தணி யையங்கரனே. (௬௪)

எரியுந்திரிய மெனவேயென்னெஞ்சத் திருப்பினுமால்
பரியும்புரியுங் கருணையென்றேயுன் பதந்தொழுவே
னரியும்பரியுமொன் றாக்கியகோன்றொண்டர் நற்பணியே
யரியுங்கரியும் புரிதணிகாபுரி யையங்கரனே. (௬௫)

தெரிக்குமடியவர்க் கொன்றுங்கொடாதவர் தேடுசெம்பொ
னெரிக்கும்பசாசுக்குங் கள்ளர்க்குங்கொள்ளைக்கு மீந்தழிவார்
கரிக்கும்புலிக்குங் காடிக்குமானின் கணத்தினுக்கு
மரிக்கும்பகையகலுந் தணிகாசலத் தைங்கரனே. (௬௬)

செவ்விக்கணிகையர் மாலுழப்போர்நின் செயலுணரார்
கவ்விச்சருமந் தினுநாயமுதத்தைக் கண்டிடுமோ
தவ்வுற்றவெற்புகள் நீலமுப்போதலர் சத்தியத்தா
லவ்வித்தழுக்கறுக் குந்தணிகாசலத் தைங்கரனே. (௬௭)

வடியொன்றுவேற்கண் மடவார்கலவிக்கள் வாய்மடுத்தேன்
மிடியொன்றுபாவ வினைதவிர்த்தென்னுள மேவியிடாய்
துடியொன்றுசங்கரன் கைத்தலைமுத்தலைச் சூலமென
வடியொன்றுமூன்றுக மாகுஞ்செருத்தணி யையங்கரனே. (௬௮)

தமரகத்தாவென் றுனைப்பழியாதெழிற் றையலர்பாற்
கமரகத்தூற்றிய பால்போல்வறிது கழிக்கதென்றேள்
குமரகத்தாவுக்கு வெஞ்சினச்சூரொறுங் கோளாக்க
ணமரகத்தாக்குஞ் செருத்தணிகாசலத் தைங்கரனே. (௬௯)

நாயகனென்னு முனைப்பணியாமல் வெறுவியரை
யெனாயகனென்று துதித்துழல்வேன் வினையென்றறுமோ
செனாயகன்றண்சுனைக் காவிமுப்போதுஞ் செழும்பகலி
லறைபகனின்றி யலர்தணிகாசலத் தைங்கரனே. (௭௰)

கரகத்தையொத்த முலைமடவாரொழிற் காட்டிலலை
விரகத்தைநீக்கிநின் பாதாரவிந்தநல் வீடளிப்பாய்
சரபத்தைத்தாக்கிடும் வெம்புலிவேழத்தைத் தாக்குமரி
பரவத்தைக்கண்டஞ்சி யோடுஞ்செருத்தணி யைங்கரனே. (௭௧)

இடவியமூலக் கணபதியாமுனைச் சிந்தைசெய்யா
திடவியபூதல மானிடர்யாரையு மேத்திநைந்தேன்
றடவியவீணை யிசைகேட்டசுணங் கடங்குசந்தத்
தடவிகள்சூழுந் திருத்தணிகாசலத் தைங்கரனே. (௭௨)

திங்களாரவெண்ணெய் நீர்தாமரைசெச்சை சென்னிவைத்தும்
துங்கனலாசுர வெம்மைக்கறுகு நுகர்ந்தணிந்தாய்
தங்கியசாரற் றனிவேய்நிறைமதி தாவிநிற்ற
லங்கசன்வெண்குடைக் காம்பாஞ்செருத்தணி யைங்கரனே. (௭௩

நிலநீர்நெருப்பு வளிவான்மதியரி நீண்டவுயிர்
குலமானவெட்டுரு வாமுன்றிருவடி கூட்டியிடாய்
தலமார்திருநந்தி யாற்றினில்மூழ்குந் தவத்தினருக்
கலமார்புறப்பொழிக் குந்தணிகாபுரி யைங்கரனே. (௭௪)

பங்கேருகன்றரு பாவையர்செங்கடைப் பார்வைதந்துன்
கொங்கேருகவடித் தாமரைநீழற் குடியளிப்பாய்
தெங்கேருகக்கனி சிந்திடும்வாளை செறிதடஞ்சூழ்ந்
தங்கேருகங்க ளழியாச்செருத்தணி யைங்கரனே. (௭௫)

விண்ணேரும்பாதல நாட்டுறைவோரு மிம்மேதினியா
மண்ணேருநீமுதற் றெய்வமென்றேயுனை வாழ்த்திடுவார்
பண்ணேருஞ்சொன்மட வாரிடைக்கஞ்சிமுன் பார்த்துமுழை
யண்ணேருங்கேசரி வாழ்தணிகாசலத் தைங்கரனே. (௭௬)

தேடற்கிசைந்திடுஞ் செம்பொனுங்கல்வியுஞ் சித்தியெட்டுங்
கூடற்கிசைந்திடு முத்தியும்வேண்டிடற் கொடுப்பவனீ
பாடற்கிசைந்திடும் விஞ்சையர்வீணை பயிலிசைகேட்
டாடற்கிசைந்த மயில்செருத்தணி யைங்கரனே. (௭௭)

செவிநாசிகாத்திரங் கண்வாயெனும்பொறி சீர்கலங்கிக்
குவிநாடிமூன்றுங் குலைந்திடும்போதுனைக் கூடவருள்
புவிநாடுமம்பலங் கச்சியண்ணாமலை பூங்குடந்தை
யவிநாசியாகுஞ் செருத்தணிகாபுரி யைங்கரனே. (௭௮)

சாக்கிரஞ்சொப் பனத்தோடேசுழுந்தி தருந்துரியந்
தாக்குமதீத மெனுமைந்தவத்தை தவிர்த்தெனையாள்
போக்கருஞ்சிந்துவைச் சிறதும்படியுயிர் போக்கிவெற்றி
யாக்கிடுமாமுக னேதணிகாபுரி யையங்கரனே. (எகூ)

கோங்காரரும்பு முலையார்மயக்கிற் குலைந்துமன
நீங்காப்பிறப்பி லலைவேனையாள நினைந்திடுவாய்
பாங்காருமிந்திர நீர்த்தமும்போதும் பசுங்குவளை
யாங்காலமூன்று மலர்தணிகாசலத் தைங்கரனே. (அ௦)

எரியைப்பலாலக் குவைகூட்டுமாறென் னெழுபிறப்பாம்
புரியைத்திருவருண் ஞானக்கினியிற் பொடிபடுத்தாய்
கரியைப்பிறகிட வேட்டுவெய்த கணையெதிர்போ
மரியைத்துளைத்தெழுந் தேகுஞ்செருத்தணி யையங்கரனே. (அக)

பாட்டைப்படித்துன் கழற்பூசைசெய்து பவமெனுமோர்
காட்டைக்கடக்கும் வகையறியேன்கடைக் கண்ணளிப்பாய்
சேட்டைக்கவிகள் விளவின்கனிகொண்டு சேண்வழிபோ
மாட்டைத்துரக்குந் திருத்தணிகாசலத் தைங்கரனே. (அஉ)

நாயைச்சிவிகையி லேற்றிவைத்தாங்கொரு நாயினுக்குத்
தாயைப்பொருவுங் கருணைசெய்தாய்நன்றி தான்மறவேன்
வேயைக்கரிவிளைத் தேதழைதின்று விடக்குறியோ
ஞயைப்புடைத்துடைக் குந்தணிகாசலத் தைங்கரனே. (ஙஅ)

குமிழொக்குநாசி மடந்தையரல்குற் குழியில்விழுந்
துமிழ்பற்கறைத்தம் பலநுகர்வேனினி யுய்வதென்றோ
தமிழொக்குந்தீஞ்சொன் மறத்தியர்வானகத் தையலர்கை
யமுதுக்குத்தேன்விலை மாறுஞ்செருத்தணி யையங்கரனே. (அச)

சருகோட்டுஞ்சூழ்வளிக் குள்ளேசுழலுஞ் சருகெனவே
பெருகோட்டமாம்பிறப் பிற்சுழல்வேனுய்யும் பெற்றிசொல்லாய்
குருகோட்டும்வேட மடவாரிசைக்குக் குழைந்தசுண
மருகோட்டுவேங்கையை நீங்காச்செருத்தணி யையங்கரனே. (அரு)

பஞ்சாநநத்தினுக் கொப்பாமுனைவிட்டுப் பாவலர்கள்
குஞ்சானநத்தையை யெர்ப்பாரைப்பாடிக் குறைநிரம்பார்
மஞ்சானனந்த னடிமுடிதேட மிலைத்தழலா
மஞ்சானனத்த னருள்தணிகாபுரி யையங்கரனே. (அசு)

பழியாவருஞ்சொல மங்கையர்மோகப் படிற்றொழுக்கான்
மொழியாவருந்துயர் கொண்டேற்கருளுதி மூதறிவுக்குங்
கொழியாவருவி யருளொழுக்காமெனக் கொண்டவர்க்கு
மழியாவரந்தருந் தென்றணிகாசலத் தைங்கரனே. (௮௭)

பஞ்சணைக்கண்க ளிருண்டுசெவ்வாயொடு பல்லுங்கிட்டி
நஞ்சனமேனி நமன்கையிற்சிக்கு மன்றேனிலருள்
மஞ்சனமாட்டி வரம்பெறுமாறு மருவுதல்போ
லஞ்சனமேகம் புடைசூழ்செருத்தணி யைங்கரனே. (௮௮)

வேண்டுகையாமுன்றன் பாதாரவிந்தத்தின மெய்ம்மையன்பு
தூண்டுகநீயருள் வேறொன்றுவேண்டித் தொழுகிலமையா
மீண்டுகந்தேறு மிளம்பிறைமல்லிகை யிண்டைமுடிந்
தாண்டுகந்தோறு மழியாச்செருத்தணி யைங்கரனே. (௮௯)

நீயிருந்துந் துதி பூசைசெய்யாதுழ னீசருக்கு
வாயிருந்தாலென்ன கையிருந்தாலென்ன மாமரமே
மாயிருஞாலத்தைத் தேராக்குமீசன வழுத்தியிடு
மாயிரநாம முடையாய்செருத்தணி யைங்கரனே. (௯௰)

சூதுங்களவு மழுக்காறும்வஞ்சமுஞ் சூழ்வினை[illegible]
காதுங்கொலையு முடையேனையாளுங் கண[illegible]யர்
யோதுமரியுங் கரியும்புல்வாயு முழைப்புலியு
மாதும்பகைமை யகறணிகாசலத் தைங்கரனே. (௯௧)

மத்தமதம்பொழி வாரணம்போல மதிமயங்கிச்
சித்தமதனி லுனையிருத்தேனையா நீதந்தருள்வாய்
சத்தமபுகலுந் தமிழ்ப்புலவோர்கருச் செந்தாட்கிளிக
ளத்தம்புகலும் பொழில்சூழ்செருத்தணி யைங்கரனே. (௯௨)

சவ்வாதுபூசிய வேசையராசை தனிற்சுழல்வே
னெவ்வாறுமுத்திக் கரையடைவேனினி யானுரையாய்
செல்வானகப்பிறை நின்றினிக்கோட்டொடு சேயுருவ
மவ்வாறுயானும் திருத்தணிகாசலத் தைங்கரனே. (௯௩)

உங்காரசத்தத்தி னுலெனதாணவ மோட்டேதற்குப்
பங்காருமவல்லவை யேனென்றநீவரும் பின்புரையாய்
சிங்காரவேட மடவார்பினைகுத்துஞ் சேவலக்கை
யங்காரகனுட ருக்குஞ்செருத்தணி யைங்கரனே (௯௪)

தானுக்கனிந்து தனியும்வெங்காட்டுத் தழலெனவே
நானுப்பிறந்திறந் தெய்த்தேனைக்காக்கு நயமுறையாய்
தேனுக்கியேமொய்க்கு மீயினையோட்டித் தினமும்வெற்ப
ரானுச்செந்தேன்கவ ருந்தணிகாசலத் தைங்கரனே. (௯௫)

வெட்டவெட்டத்தளிர்க் குங்காடுபோல மிகும்பிறவி
யொட்டவொட்டித்தொட ருந்தீவினையை யொழித்தருள்வாய்
வட்டமிட்டுக்களி மாமயிலாட வருமுகினீ
ரட்டவெட்டிக்கலை மான்பாய்செருத்தணி யைங்கரனே. (௯௬)

முதலைக்கிடங்கலர் முண்டகவல்லியின் முட்டுறல்போல்
குதலைக்கிளிமொழி யார்வயத்தாமென் குறைதவிர்ப்பாய்
பதலைப்பொருப்பர் கவலைக்கிழங்கொடு பாய்புலியி
னதளொத்துறவியர்க் கீயுஞ்செருத்தணி யைங்கரனே. (௯௭)

சித்திரகுத்தன் கணக்கின்படியெம தூதர்வந்து
குத்திரஞ்செய்து பிடியாமுன்வீட்டினிற் கூட்டியிடாய்
சத்திரவேள்விப் புகையாதவனெதிர் சார்பகைநீங்
கத்திரயாகி யெழுந்தணிகாபுரி யைங்கரனே. (௯௮)

மகத்திடைவந்த சனிபோலெனைத்தொடர் வல்வினையை
நுகத்திடைவந்த கதிர்போலவந்தெதிர் நூறியிடாய்
டகத்திடைவந்திடு கண்ணுபிரவனும டங்கயனு
மகத்திடைவைத்த மலையாஞ்செருத்தணி யைங்கரனே. (௯௯)

கொடுத்தாலெனக்கு வாழுனக்கேபுகழ் கூடுமன்றி
விடுத்தாலுனக்குப் பழியாகுநான்சொல்ல வேண்டுமதோ
தொடுத்தாலும்பாட லுளநினைந்தாலுந் துயரறவந்
தடுத்தாலுமுத்தி தருந்தணிகாபுரி யைங்கரனே. (௧௦௦)

தணிகை ஐங்கரமாலை-முற்றிற்று.



ஐங்கரத்தோன்மாலை யறைந்தான்செருத்தணிகை
தங்குகுமரேசன் றருவரத் தாற்-பொங்குதமிழ்
கற்றுணர்ந்ததூய கவிராசன்கந்தப்பன்
முற்றுணர்ந்தோர் பேரவையின் முன்



உ

கணபதிதுணை.

# திருத்தணிகைச் சந்நிதிமுறை.

மூன்றாவது

# தணிகை தயாநிதிமாலை.

நீரணிமலர்கொண்டருச்சனைபுரியே னின்றிருத்தாள்பணிந்தறியேன்
சீரணிதமிழ்மாலைத்தவுமறியேன் றீவினைதொலைத்தருள்புரியாய்
பூரணியுலககாரணியிமையப் பொருப்பிறையளித்தமுக்கண்ணி
யாரணிவிமலையருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧)

நீதியுமறியேனெறிகளுமறியே னின்றிருப்புகழனுதினமு
மோதியுமறியேனாயினும்வாங்க ளுகந்தெனக்கருள்புரிந்திடுவாய்
சாதியுங்குரவும்வேங்கைகுங்குமமுஞ் சந்தனங்களுமணங்குலவு
மாதியேம்பரமனருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨)

எண்ணிலேனுனதுசடக்கரமதனை யிருந்தவநோன்புநல்விரதம்
பண்ணிலேன்றுதிகள்படித்திலேனதிக பாவியேன்றனக்கருளுவையோ
விண்ணில்வானவர்தஞ்சிறைதனைத்தவிர்த்து வேண்டியவரங்களையளித்த
வண்ணவேலதணிகைப்பதிதனிலுறையு மாறுமாமுகதயாநிதியே. (௩)

முன்செய்தீவினையோபின்செய்தீவினையோ மூண்டதுநல்குரவதனுக்
கென்செய்கேனடியேன்றுயர்களைந்துயர்வீ டெனக்கருள்செய்யுநாளுளதோ
மின்செய்நூலிடையாள்வேடர்தஞ்சிறுமி விரும்பிவாழ்திணைப்புனமதனி
லன்புசேர்கணியாய்நின்றிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪)

காதரமனைத்துந்தொலைந்துனதடியைக் காட்டியுன்னடியரிற்கூட்டிச்
சீதரன்பிரமனறியொணாவீட்டிற் சேர்த்தியாட்கொள்ளுநாளுளதோ
பூதரமனையசிங்கமாசூரன் பொருகரிமுகனசுரேச
னூதரமனைத்துந்தொலைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫)

மேருவைச்சேருங்காகம்பொன்னிறமாய் விளங்கல்போலுன்னடிக்கமலச்
சாருவைச்சேருமெனையுநின்னடியார் தம்மொடுங்கூட்டியாண்டருள்வாய்
தாருவைச்சேரும்வல்லிபோலிருவர் தனம்படவிளங்குதிண்புயனே
யாருவப்புடன்வானோர்பணிதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬)

சிவனடியவருக்கிடர்புரிந்தாலுந் தீவினைபலபுரிந்தாலும்
பவநெறிக்குரியபாவமேசெயினும் பஞ்சபாதகங்கள்செய்தாலுந்
தவநிலைகுலையத்தாழ்வுசெய்தாலுஞ் சகித்தெனைப்புரந்தளித்திடுவா
யவனவளதுவாயமர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭)

சிறப்பொடுபூசை புரிகிலேனெனினுஞ் சினகரம்வலம்புரியாமன்
மறப்பொடுநிலத்திற்றுட்டரோடிணங்கி வாய்மையைப்புகல்கிலேனெனினும்
பிறப்புடனிறப்பாங்கடலழுந்தாமற் பிரசமாமலர்ப்பதந்தருவா
யறப்பணிபுரிவோர்க்கருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௮)

பஞ்சபாதகமேபுரிகினுமுன்னைப் பவந்தொறுந்தீமைசெய்திடினுந்
தஞ்சநீயெனவந்தடைந்திடுங்கொடியேன் றன்பிழைபொறுத்துநல்வரங்கள்
விஞ்சவேயருளியெனைப்புரந்திடினுன் மேற்பிழைசொல்பவருளரோ
அஞ்சவாகனனுக்கருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯)

மழையிலாப்பயிர்போல்வாடினேன்கருணை மழைபொழிந்தியான்முனம்புரியும்
பிழையெலாம்பொறுத்துப்பெருவரமளித்துப் பேயனேன்காணவந்தருள்வாய்
தழையெலாங்கீழாய்விண்ணில்வேரோட்டுஞ் சலதிமாமரந்தனைப்பிளந்த
வழகனேதணிகைமலையில்வீற்றிருக்கு மாறுமாமுகதயாநிதியே. (௧௦)

மந்தரமனையபாவமேசெயினும் வல்வினைபலபுரிந்திடினும்
பந்தனைப்பிறப்பிலழுந்தினுமுனது பங்கயப்பாதநான்மறவேன்
சுந்தரமுகுந்தன்மருகனேயடியர் துயரெலாந்தவிர்த்தசற்குருவே
யந்தரத்தவர்நின்றருச்சனைபுரியு மாறுமாமுகதயாநிதியே. (௧௧)

துக்கசாகரத்திலழுந்தியெந்நாளுந் தொலைவிலாக்கவலைநோயடைந்து
மிக்கபேறிவுகுலைந்துநான்புவியில் வீணிலேதிரிவதுமழகோ
தக்கவாழ்வருளிபுலகெலாமதிக்குந் தனியரசெனக்கருள்புரிவாய்
அக்குமாலையனீன்றருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௨)

இந்திரன்பதமுமிமையவர்பதமு மெண்டிசைக்காவலர்பதமுஞ்
சந்திரன்பதமுஞ்சூரியன்பதமுஞ் சக்கரமாயவன்பதமுங்
கந்தமாமலரோன்பதவியுமுனது கடைக்கணாலுதவியபதமே
யந்தவாறெனக்குமருடிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௩)

வேண்டியவரங்கள்பற்பலவுதவி வேண்டியசெல்வமுமளித்துச்
சேண்டருமுனதுபாதபங்கயத்திற் செலுத்திடத்தியுமருளாய்
தூண்டருசெம்பொற்புயங்கள்பன்னிரண்டுந் துதிப்பவர்பகையறுப்பவனே
யாண்டலைக்கொடியைப்பிடித்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௪)

பெரியவர்தமக்குப்பிழைபுரிந்தேனோ பிறர்மனைதனைவிழைந்தேனோ
குருமொழியிகழ்ந்துபழித்துரைத்தேனோ கொடியமாமிடியினேன்மெலிவேன்
றிருவருள்புரிந்துதீவினையகற்றிச் செல்வமுங்கல்வியுந்தருவாய்
அரியயன்பணியுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௫)

மட்டிலாப்பாவந்தனைப்புரிந்தாலு மலரடிக்கன்பிலாதுழலுந்
துட்டரோடுறவுசெய்திருந்தாலுந் தூயநின்சந்நிதியடுத்தால்
விட்டிடாதின்னுமிருக்குமோவினை விரித்துநீயெனக்குரைத்திடுவாய்
அட்டமாசித்தியருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௬)

வாசவன்மலரோன்வேண்டுநல்வரமும் வாழ்வுநீதந்தனைமுன்ன
நீசனேன்வேண்டும்வரமுதவாம னிற்பதுநீதியோவுரையாய்
பேசியேகலியில்வரந்தருந்தெய்வம் பிறரிலையெனவுனையடுத்தேன்
ஆசறுமுனிவர்தவஞ்செயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௭)

வெந்தநீரணியும்வேதியர்மறையுள் விதித்திடும்விதிவழிநடப்ப
தெந்தநாளுனதுதிருவடிக்கன்பா யிருப்பதுமெந்தநாளுரையாய்
இந்துசேகரனுக்கோமெனும்பொருளை யிருஞ்செவியிடைப்புகல்குரவா
வந்தமாதியுநீங்கிடுந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௮)

மனந்தனிலுனதுதிருவுருநினைக்க வாயினாலுன்புகழ்வழுத்தக்
கனந்தருதலையாலுன்கழலிறைஞ்சக் கசடனேற்கென்றருள்புரிவாய்
தனந்தருமளகைக்கதிபதிதோழன் றந்தருண்மயூரவாகனனே
யனந்தனும்பணியுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௯)

பாயுமாமதஞ்சேர்மதகரிபோலப் பற்பலதீங்குசெய்திடினு
நீயுமோரறிவாமங்குசமதனா னிறுத்தியாட்கொள்ளுநாளுளதோ
தாயுமாயுயிர்க்குத்தந்தையாயுலகந் தனைப்புரந்தருள்குருபரனே
யாயுமாமறைகடேடருந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௦)

காலமேயெழுந்துன்றிருவடிநினைந்து காமலர்பறித்துநின்பூசை
சாலவேபுரியாதுழலுநாயடியேன் றனக்கருள்புரிவதென்றுரையாய்
நீலமாமயின்மேலேறியோர்நொடியி னிலவுலகெலாம்வலம்வருவாய்
ஆலமாமிடற்றோனருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௧)

மாயிரும்புவியின்மனிதராய்ப்பிறந்து வண்டரைமதனெனப்புகழ்ந்து
போயிரந்துண்ணும்புலவர்நின்கமலப் பொன்னடிகாண்பதற்கெளிதோ
தாயிரங்காதபிள்ளைபோலடியேன் றவிப்பதுநீதியோவுரையாய்
ஆயிரங்கதிரோன்பணிதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௨௨)

சாத்திரமறிந்துன்றிருவடிக்கமலந் தன்னையுமருச்சனைபுரியேன்
பாத்திரமறிந்துபிச்சையிட்டறியேன் பாவியேனுய்யுநாளுளதோ
காத்திரம்படைத்தசிங்கமாசூரன் கவிழ்ந்திடவயில்விடுத்தவனே
யாத்திரண்மேய்த்தோன்மருகனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௩)

காகமுநரியுந்தமதெனுமுடலைக் காதலித்துலகெலாமலைந்து
சோகமுந்துயரும்படைத்தநாயடியேன் றுயர்கெடவருளுநாளுளதோ
மாகமுஞ்சுராருவாழ்ந்திடச்சூரன் மடிந்திடவேலெறிந்தவனே
யாகமமபுகலுமுயர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௪)

நிலையிலாப்பொன்னுநிலையிலாமண்ணு நிலையிலாப்பெண்ணையுநினைந்து
கலையிலாவுணர்வோடெங்கணுமயங்குங் கசடனேனுய்யுநாளுளதோ
தலையிலாக்கவந்தமெண்ணிலநடிப்பத் தருவர்தஞ்சென்னியைத்தடிந்தோய்
அலையுலாஞ்சுனைசேர்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (உ௫)

இக்குவேறிலையுன்றிருவடியல்லாற் றீயனேன்குறையெலாம்புகன்று
மிக்கபோருளைப்புரிந்திடாதிருந்தான் மெய்யருள்பொய்யெனப்படுமோ
லிக்கணந்தணிகைவேண்டியவாங்க ளீந்துநல்வாழ்வுந்தருள்வா
யக்கமீராறுபடைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௬)

உனதுமாமலையைத்தினம்வலம்புரிந்து முபாசனைசெய்திருந்திடினு
மெனதுதீவினையைத்தடிந்தருள்புரியா திருப்பதுமுனக்கழகியதோ
சனகனேமுதலாமுனிவருங்கமலைத் தவிசினோனுநிவிண்ணவரு
மனகனேயெனவாழ்த்தெடுத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௭)

பழியிலாவுடலும்பயமிலாமனமும் பாதகத்துடன்படாச்செயலும்
கழிவிலாவயதுங்குறைவிலாத்தனமுங் கடும்பகைதானிலாவரசு
மொழிவிலாவறமுமிழிவிலாககதியு முனதடிநம்பினேற்கருள்வா
யழிவிலாப்பதவியருளசெருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (உ௮)

படைக்கலச்சுமக்கும்பகைவரைத்தடிந்து பாரெலாமொருதனியாண்டு
மடைக்கலஞ்சுமந்தமசனிரைப்புணர்ந்து மைந்தரும்வாழ்வுமேசிறந்து
கொடைக்கலமிலாதுகொடுத்திடுநீயுங் குலவுமுன்கருணையென்றறிந்துன்
அடைக்கலம்புகுந்தேனருள்புரிதணிகை யாறுமாமுகதயாநிதியே (உ௯)

சாலையிலெழுந்துமஞ்சனமாடிக் கால்களால்வலஞ்செயவுச்சி
வேலையிலடியார்பசிகெடச்சமைத்து விருந்துசெய்வித்திடவந்தி
மாலையிற்றூபதீபமுமேமாறி மகிழ்ந்திடும்பேறெனக்குதவா
யாலையங்கழனிசூழ்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௦)

குங்குமம்புனுகுசந்தனமகரு குறைநூலுகற்பூரமருவேர்
டைங்கருங்குவளைதண்புனல்கொடுநின் பதமலரருச்சனைபுரியும்
புங்கவரடிக்குற்றேவல்செய்தொழுகும் புண்ணியமெனக்குவந்துறுமோ
வங்குசபாசன்றம்பியாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௧)

நீதியோவுனக்குநான்வெகுநாளாய் நின்றிருச்சந்நிதியடுத்தேன்
சேதியாவையுமேசெப்பினுங்கேளாச் செவிடர்போலிருப்பதீங்கழகோ
வோதுவாயொருசொலுண்டிலையென்ன வுனக்குநானடிமையுமலவோ
வாதியேநடுவேயந்தமேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௨)

கார்த்திகைவிரதந்தனைமறந்தேனே கந்தசஷ்டியிற்பிழைத்தேனே
தோத்திரஞ்செய்யுந்தொழின்மறந்தேனே துணையடிக்கன்பொழிந்தேனே
பாத்திரங்கொண்டுபலிக்குழலாமற் பாவியேன்றுயர்களைந்திடுவா
யாத்தர்கடுணையாய்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௩)

கொடியவருறவேகொண்டிருந்தேனே கொடுவழுக்கிடைதவறினனே
குடிமனையவள்கற்பினையழித்தேனே குற்றங்கள்பலபுரிந்தேனே
மிடியுறுதமியேன்றுயரெலாந்தவிர்த்து வேண்டியசெல்வநீயருள்வா
யடியவர்துணையாய்வருந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௪)

செங்கதிருலவுமுலகெலாமுலைவித் திரிந்தொருசாண்வயிற்றினுக்குக்
கங்குலும்பகலுமிளைப்பினைப்பேடுங் கயவனேனுய்யுநாளுளதோ
சங்கரன்மகனேசதுமுகன்குருவே தயித்தியர்தங்குலப்பகையே
யைங்கரன்றுணையேயுயர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௫)

நாரியர்க்கிரங்கிரசனனூல்படித்து நயம்பெறுசன்னைகள்பேசிப்
போரியல்கலவிக்கொருபெரும்புலியாம் புன்மையனுய்யுநாளுளதோ
நீரியல்கமலமலரினோன்சிரத்தி னீண்டவங்குலியினாற்புடைத்தா
யாருயிர்க்குயிராய்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௬)

குமரனாய்விருத்தக்கிழவனாயுடலங் கூனொடுநரைதிரைகொண்டு
தமரெலாமிகழவுயிரகல்பொழுதுஞ் சரவணபவவென்றுருடலங்
கபரிலேயுதும்பாலெனப்படுமவர்க்கோர் கதியுமேயிலையெனப்படுமோ
லமரெலாங்கடந்ததணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௩௭)

கருவியோர்முப்பத்தாறினுலியங்குங் காயமோடிருநிலஞ்சுவர்க்க
மருவியேசரிந்துபிறந்திறந்துழலு மடையனேனுய்யுநாளுளதோ
குருவியோட்டியவேட்டுவக்குலமகளிர் குலவியசாரலிற்செந்தே
னருவிபாய்ந்திழிபுந்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௩௮)

மாவிருந்தினர்தம்பசிகெடவுரவும் வண்மைதந்துடல்விடும்பொழுது
பூவிருந்தவனுமாயனுங்காணாப் பொன்னடிநீழறந்தருள்வாய்
கோவினம்பயில்செந்தூர்பரங்குன்று குன்றுதோறாடல்சோலைமலை
யாவினன்குடியோகம்பயிறணிகை யாறுமாமுகதயாநிதியே. (௩௯)

கெறுவியாயகந்தைபலபுரிந்திடினுங் கெண்டைவாள்விழியினார்கலவி
யுறுவியாதியினாலுனைமறந்திடினு முறுபிழைபொருத்தருள்புரிவாய்
மறுவிலாக்கற்பின்வள்ளிதெய்வானை மணந்திடுமணிவரைமார்பா
வறிவினோரறிவாயொளிர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௦)

தேனிலங்கியசொன்மாதரார்வயிற்றிற் றிங்களீரைந்துமுட்டங்கி
நானிலந்தனிலேயினிப்பிறவாம னாயினேற்கருள்புரிந்திடுவா
யூனிலங்கியவானவர்களுமறியா யோகியர்மனத்திலேவிளங்கு
மாணிலைந்தாடுமரனருடணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௧)

மன்னவன்மகனையடுத்திடிற்பெரிய வாழ்வினையடுத்தபோதளிப்பான்
பின்னலஞ்சடையுன்பிதாவினையடுத்தாற் பெரிதுநாட்செல்லுமென்றறிந்தே
யுன்னைவந்தடுத்தேனாதலாற்செல்வ முரைத்திடுமுன்னெனக்களிப்பா
யன்னமென்னடையார்பயில்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௨)

பகலினுமிரவுமுண்டுடுத்துறங்கும் பயனலாதொருபயனறியேன்
புகலரும்பரமானந்தவாரிதியிற் புகுவதெக்காலமோவுரையா
யிகலுமுப்புரங்கடழலெழச்சிரித்த விறையவனுதல்விழிபிறந்தோ
யகிலிடுந்தூபமுகினிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௩)

குருபரனெனும்பேருனக்கலாதெவர்க்குக் கூறுநான்மறைகளாதலினுற்
றிருவடிநிழலிலெனைவிடாதிருத்தத் திருவருள்புரிகுவதரிதோ
பொருகரிவதனனொடுகிரவுஞ்சம் பொடிபடவயிலெறிந்தவனே
யருவுடனுருவாயொளிர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௪)

நித்திரைதனிலுங்குத்திரம்புரியு நினைவுளேனுன்றிருவடியைப்
பத்திரம்புனல்கொண்டருச்சனைபுரிந்து பரகதியடையுநாளுளதோ
சித்திரக்கலாபமயின்மிசையேறிச் செகமெலாநொடிவலம்புரிவோ
யத்திரவிழியார்நடஞ்செயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௫)

கணுமுதிர்கருப்பஞ்சிலையினைவளைக்குங் காமனைவென்றமாதவர்க
ணணுகிருசரணபங்கயமலரி னறவினைப்பருகுநாளுளதோ
வெணுமொருநொடியின்மேருவையணுவா யியற்றுவையிதற்குமாறுக
வணுவையோர்மேருவாக்கிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௬)

மறுதியைம்பொறியுன்வழிக்கொடுநடந்து மருவுமைம்புலனுகர்ந்திடினுங்
கறுவொடுபேய்த்தேரெனப்படுமுலகைக் கண்டுமெய்யெனமயங்குறினு
மெறுதியென்றுனையேநினைத்தனுதினமு மேத்திடுஞ்செல்வமேயருள்வாய்
அறுதியேயுயிர்க்குத்துணையதாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௪௭)

வையமுற்றினும்போய்க்கங்கையேமுதலா மாநதிபலபடிந்திடினுந்
துய்யநற்றலங்கடொறுமினிதடைந்து துணைக்கையாற்றொழுதுவாழ்த்திடினுஞ்
செய்யநின்றணிகைக்கிரியினையணையார் சிவகதியடைகுவதரிதே
யையமிட்டுணுமாதவருளத்திருக்கு மாறுமாமுகதயாநிதியே. (௪௮)

முந்தைநல்வினையால்வந்துமானிடராய் முதுநிலந்தனிலவதரித்தும்
வந்தனைபுரியாதுண்டுடுத்துழலு மக்களில்வானரப்பிறப்பே
சிந்தனையறியாநற்பிறப்பாகு நீதியொன்றறிகிலாமையினு
லந்தணர்மகஞ்செய்தணிகைமால்வரைவா ழாறுமாமுகதயாநிதியே. (௪௯)

வேரலிற்பிறந்தசெந்தழலந்த வேலைமுருக்கிடுஞ்செயல்போற்
பேருடற்பிறந்தகாமமிவ்வுடலைப் பிணிபடமுருக்குமெந்தன்செய்வேன்
சாரலிற்குறவர்கிழங்ககழ்குழியிற் றாளமோடணிகொள்வச்சிரமு
மாரவேநிரைக்குமருவிதாழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௦)

பிறந்திறந்துழலும்பெருவியாதியையும் பெரும்பசிநோய்சுடத்தளர்ந்து
நிறங்குலைந்தொருவர்பின்றிரிந்துழலு நிரப்பெனுங்குறுவியாதியையுந்
திறந்தருள்கடைக்கட்பார்வையாமருந்தாற் றீர்த்தருள்புரியுநாளுளதோ
வறம்பொருளின்பம்வீடருள்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௧)

திரைகடலுடுத்தநிலத்திடையழியாச் செல்வமுங்கல்வியுமறிவு
மிரப்பவர்க்கிலையென்றுரைத்திடாதுதவு மீகையுமெனக்கருள்புரிவாய்
புரக்குமைந்தருமாநிதிமணிகவர்ந்து புலவருக்களிக்கணேபுரிந்த
வரக்கரையழித்தசெருத்தணிமலைவா ழாறுமாமுகதயாநிதியே. (௫௨)

பணித்துடல்வெதும்பும்படிதவம்புரிந்து பாரெலாம்வலம்புரிந்துழல்வோர்
தனித்திருந்துனதுதிருவடிநினைந்து சரவணபவவெனவுரையார்
கனிப்பழமிருப்பவிடுத்தருகிருந்த காயினைப்பறித்தருந்துவரே
யணித்தமுங்கடந்துநித்தமாந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௩)

விடுத்திடற்கரியபஞ்சபாதகமே விளைத்திடுமெனக்குமெய்வரங்கள்
கொடுத்திடிலுனையார்தடுப்பவர்புரளுங் குரைகடற்றன்னையார்தடுப்பார்
முடுக்கருட்டவஞ்செய்யோகியர்தமக்கு முசுக்கலையேவல்செய்தொழுகு
மடுக்கலிற்சிறந்ததிருத்தணிமலைவா ழாறுமாமுகதயாநிதியே. (௫௪)

குவிகரங்கொடுநின்றனைவலம்வரவுங் குரைகழன்மனநினைந்திடவுங்
கவியறிந்துன்சீர்பாடவுமெனக்குக் கருணைநீபுரியுநாளுளதோ
புவியிலந்தணர்களனைவரும்சாரற் புறத்திலேயணைந்தனுதினமு
மவிசொரிந்தியாகம்விளைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௫)

நச்சுமாமரமேயாயினுமொருவர் நாணிலந்தன்னிலேவிளைந்து
வச்சமாமரமேயாயிடிற்றண்ணீர் வார்த்திடாதுலர்த்திடுமேவர்யார்
துச்சமாமாயைவினையுடலடுத்தாய் சுத்தவீடருள்புரிந்திடுவா
யச்சனோடனையாய்த்துணைசெயுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௬)

விலங்கலைக்கடலைவெய்யசூரத்தை விழுங்கிடவெறிந்திடுமயிலால்
கலங்கலைப்புரியுமாணவமாயை கன்மமூன்றையுமழித்திடுவா
யுலங்கலைத்தகர்க்கும்பன்னிருபுயத்தி னும்பர்நாடிறைதருங்கழுநீ
ரலங்கலைப்புனையுமொருதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௭)

முகத்திருவிழியுமூக்கிடையிருத்தி மூடிவாய்மூச்சையுட்செறித்துப்
பகைத்தவைம்பொறியுமடக்கிநெஞ்சிடையுன் பதமலரிருத்துநாளுளதோ
சகத்திருள்கடியுமுதையமால்வரைபோற் றணிகைமால்வரைமிசையடிய
ரகத்திருள்கடியுஞானசூரியனே யாறுமாமுகதயாநிதியே. (௫௮)

நாண்டுறந்தெழில்சேர்நாரியர்கலவி நறவினையநுதினநுகர்ந்து
மாண்டிறந்துலகிலிப்பிறந்திடினு மலரடிக்கன்பெனக்கருள்வாய்
கோண்டருமுலகிலேகுலைந்தழிந்து குரைகடலுமேருவுமழிய
மாண்டுகையபலவுமழிவிலாத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௫௯)

வெங்கொலைகளவுகாமமோடரும்பொய் விளங்கறிவகற்றுகள்ளருந்த
லிங்கொருதினமுமொழிந்திடாக்கொடியே னிடர்க்கடலேறநாளுளதோ
பைங்கருங்குவளையநுதினமூன்று பாகசாதனன்சுனையலரு
மங்கதிசயஞ்சேரண்ணலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௰)

வெஞ்சிறைப்பிறவிவேதனையொழித்த மெய்த்தவர்சேருநின்பதந்தென்
னெஞ்சிறைக்குடியாய்நின்றிடும்படிக்கு நீடருள்புரியுநாளுளதோ
மஞ்சிறையளித்தமகடனக்கிறையாய் வானுலகெலாம்வலம்வருவா
யஞ்சிறைக்கோழிக்கொடியனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௧)

செம்புயம்பனிரெண்டிருபதமாறு திருமுகமயிலயில்சேவல்
பைம்புயற்கூந்தல்வள்ளிதெய்வானை பாகமுங்காணுநாளுளதோ
கம்புயர்பருதிகரங்கொளுமுராரி கவின்பெறுமார்பினிற்பிரியா
வம்புயமலராண்மருகனேதணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௨)

பிழைத்தவைபொறுத்தல்பெரியவர்கடனும் பேயனேன்பிழையெலாம்பொறுத்
தழைத்தருள்புரிந்துன்றாமரைமலர்த்தா டலைமிசையிருத்துநாளுளதோ |து
கழைத்தலைவளியினசைந்திடல்வரை தான் கைபெடுத்தன்பரைக்கடுகி
யழைத்தருள்புரிவதெனப்படுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௩)

எவ்வுலகமுமாண்டிறந்திடாச்சூர னிருந்திடுமகேந்திரபுரியாந்
தெவ்வுலகத்தையழித்தநின்கருணைச் செழுங்கடைப்பார்வைதந்தருள்வா
யிவ்வுலகத்தோர்பணிந்தெழுந்தேத்து மிதுவலாலிந்திரனுறையு
மவ்வுலகத்தோர்தொழுவளர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௪)

பரிகரியிரதம்பதாதிகள்சூழப் பகைவரைத்தடிந்துசெங்கோல்கொண்
டொருகுடைநிழலிலுலகெலாம்புரக்க வுனதருட்பார்வைதந்தருள்வாய்
பொருகரிமுகனுக்கிளையவனாகிப் பொன்னுலகினைப்புரந்தளித்தோ
யரிகரிமுனிவர்க்கேவல்செய்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௫)

மாதிரைகடல்சூழ்மண்ணகவாழ்வின் வாய்மையைத்துறந்துசாண்வயிற்றின்
றீதிரைக்குரியபொய்ம்மையேபேசித் திரியுமென்பவமொழிந்திடுமோ
மீதிரைத்தெழுந்துவருநிசாசரரை வென்றமரர்பதியளித்தோ
யாதிகிறைவனருள்செருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௬)

கருக்குழிபடிந்துபிறந்திடுதுயருங் கண்கள்பஞ்சடைந்துவாய்குழறி
நெருக்கியகபத்தாலிறந்திடுதுயரு நீசனேனொழியுநாளுளதோ
தருக்களிலுதிரும்பொன்மலர்களுலவித் தமனியமலையெனக்கருதி
யருக்கனுமதியும்வலம்வருந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௭)

தீர்ப்பதற்கரியவுடலபிமானந் தீர்ந்தருந்தவம்புரிந்தவரும்
பார்ப்பதற்கரியபங்கயமலர்த்தாட் பாவியேற்குண்டுகொல்சதிரோன்
றேர்பரித்திரளைவேங்கைமீதகவும் செம்முகமந்திவானீட்டி
யார்ப்பரித்தடித்துநடந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௮)

வெம்பியாய்வயிற்றிலையிருதிங்கண் மேவியிப்புவிதனிலுதித்து
நம்பியாயிழையார்கலவியிற்றிளைக்கு நாயினேற்கருளிபமுகத்தோன்
றம்பியாயடுத்தசீயிருத்தலினாற் றரணியோர்பிறவியங்கடலுக்
கம்பியாயடுத்துவளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௬௯)

வாளிகல்புரியும்வடிவெகிர்நெடுங்கண் மங்கையர்போகமேநுகர்ந்து
நாளிகந்தொருவிநரகிடைவிழாம னாயினேன்றனக்கருள்புரிவாய்
கூளிகடொக்குந்தானவக்குழுவிற் குஞ்சரகுழுவிரிந்தோட
வாளிகடொக்குஞ்சாரலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭0)

மெய்க்கினியனவேசெய்துநல்விரதம் விடுத்துழல்மடமையேன்வீட்டிற்
புக்கினிதிருக்குமடியவர்கமலப் பொன்னடிகருதுநாளுளதோ
கொக்கெனத்தினமுங்கொலைகுறித்தொழுகுங் கொடியதானவர்களைத்துணிக்க
வக்கினிகரத்திலுதித்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௧)

கருடனைநினைக்கத்தொலைந்திடுவிடம்போற் காணகத்தினைப்புனக்குறத்தி
திருடனென்றுன்னைச்செப்புவோர்பிறவித் தீவிடமக்கணத்தறுமே
யொருகணப்பொழுதின்மதுரையர்பெருமா னுடலூறுவெப்பெலாமகற்றி
யருகரைக்கழுவிலேற்றிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௨)

கொங்கையங்குவடுங்கருவிழிக்கடலுங் கூந்தலங்காடுஞ்சென்றுலவி
மங்கையரல்குற்பணிவிடக்கீண்டி மயங்குமென்னுயிர்தனைப்புரப்பாய்
சங்கையொன்றில்லாப்பிரணவப்பொருளைத் தமிழ்வரைகுறுமுனிவரனுக்
கங்கையினெல்லியெனப்புகறணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௩)

வானகம்புரக்கும்வாழ்வையுநவிரும்பேன் மண்ணகவாழ்வையும்விழையேன்
கானகக்குறவர்போற்றுமின்பாத கமலமேமருவுவன்றமியேன்
போனகம்பசிநோயுலக்குமாக்குநர் புகலவவண்ணனன்றிருமருகா
வானகந்துடியோடார்த்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௪)

கொவ்வையங்கனிவாய்மகளிரையணைத்துக் கொடியமைமென்முலைப்படத்தழுந்தி
நவியம்பகையாங்கூற்றினுக்கிரையாய் நலமழிந்தொழிகுவதழகோ
செவ்வியமறையோர்சாலைகடோறுந் தீயிறைகுறிமகமபுரிபு
மவ்வியகவியலூர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௫)

கூம்பலங்கரமுங்குழைந்திடுமனமுங் கொண்டுனதிணைப்பதம்புரிவோர்
தாம்பலன்பெறுப்பேறரியயன்றனக்குஞ் சாற்றரிதெனமறையுரைக்கும்
பாம்பலங்காரப்பரனெனமுற்றும் பற்பலசொரிமதுவாமேருங்கு
மாம்பலஞ்சாரல்வளர்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௬)

விடங்கலந்திடுதீம்பாலெனவுயிரை விராயாணவத்தினைப்போக்கி
நடங்கலந்திடுமுன்சீறடிக்கமல நன்மருந்தளித்தெனைப்புரப்பாய்
மடங்கலுங்கரியுமுழுவைபுந்தவஞ்செய் மாதவர்தமக்குவாணங்க
ளடங்கலும்பணிசெய்தகமகிழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௭)

விடைமிசைவருநின்றந்தைதன்செவியில் விளம்பியபிரணவப்பொருளைக்
கடையனேன்செவியிற்புகன்றுநின்கமலக் கழற்றுணைநீழலென்றருள்வாய்
தடையறுகதிர்த்தேர்ச்சாரதிபரியைத் தாக்குமுட்கோல்படவேய்த்தே
னடைகிழித்துகுதேனருவிதாழ்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௭௮)

வல்லகாத்திரஞ்சேர்மகரியெனவே மறைநெறிகடந்துதீவினையாற்
பல்லகாத்திரமாய்ப்பிறந்திறந்துழலும் பாவியேனுய்யுநாளுளதோ
நல்லதாத்திரியாவிந்திரன்றெரூட்ட நறுஞ்சுனைநீலமேவுதலா
லல்லகாத்திரியாம்பெயர்பெறுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (எகூ)

நந்தினைப்பதுமநிதியினைப்பழித்த நறுங்களமுகத்தியர்கலவித்
துந்தினைப்படித்துவிடவொடுங்கிரியுந் தரியனேனுய்யுநாளுளதோ
சந்தினையகிலைவேங்கைகுங்குமத்தைத் தடிந்தெறிந்தொருநதிவேட்டுவர்க
ளந்தினைவிதைக்குஞ்சாரலந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அ௰)

மாடகத்திவவியாழ்முனியுரைப்ப வள்ளிமால்வரைப்புறத்தடைந்து
காடகக்குறமான்றனைப்புணர்வேடங் கனவிலுநனவிலு மறவே
னேடகக்கழுநீரென் றமூன்றலர வெனைக்கிலையெனத்தலைபிறங்கி
யாடகக்கிரிநாணுறுந்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அக)

சமயமூவிரண்டிற்சார்ந்தவர்புகலுஞ் சமுசயப்பொருளொலாநினைந்து
கமையறுபிறப்பிலுழந்திடாதுனது கழலிணைகருதுநாளுளதோ
விமையவர்வேடர்க்கமுதமீந்திறலி னிருப்பிழிகவர்ந்ததிர்விருந்தா
யமைவுறவிசும்பின்வளர்ந்தெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஉ)

பொருந்திடுகற்பின்மனைவியும்பொருளும் புதல்வருமிம்மையிலளித்துத்
திருந்துமொண்கதியையடைமையினளிக்குந் திறத்தினைக்கண்டுனையடுத்தேன்
வருந்துறுபிறப்பிலழுத்துமாணவமா மலிபெரும்பகைசடிந்தோங்கு
மருந்தவர்க்காரணமாயமர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அங)

கூனையுந்தெரியாக்குருட்டையும்பணிவோர் தொழவெப்பிறப்பையுநீக்கி
வானையுஞ்சிந்தாமணியையும்வேண்டும் வரத்தையுந்தருதல்கண்டடுத்தேனா
றேனையுமறையோர்க்கரசீந்திடுபொற் றிரளுநாதானநீர்நனையும்
யானையும்மதநீர்கொண்டிழிதணிகை யாறுமாமுகதயாநிதியே. (அச)

முன்னையெத்தவத்தோவந்துமானிடத்தின் முழுதுடறன்னையாணெடுத்தும்
பின்னருற்றிடுதற்கரியவிப்பொழுதே பெருந்தவம்புரிந்திலேனினையேன்
றென்னிசைக்களிவண்டினங்கள்பற்பலவாந் தேனடைமொய்ப்பவாதலர்சே
ரன்னசத்திரங்கணிகர்த்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அரு)

விரிந்திடும்பிறவிக்கடலகத்தழுந்தி விலோயெனுந்திரைகளாலலைந்து
திரிந்திடாமச்சுறவினுலையருந் தீயனேன்றுயர்களைந்திடுவாய்
வருந்திடும்பகையைமாய்க்குமன்னவர்போல் வனசரர்விதைத்தசெந்தினையை
யரிந்திடக்கணிகளலர்ந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அசா)

தத்தலைக்கடலின்வேறுவேறுகுஞ் சமுசயச்சமயநூல்பலவுங்
கத்துலைவிடுத்துன்கழறலைச்சூட்டிக் கசிதலையடையுநாளுளதோ
முத்தலையேகபாதருத்திரன்போன் முத்தலைபொன்மைவெண்ணிறமா
யத்தலைமுதலொன்றுயெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஎ)

வரம்பெறுமநவான்முதலியோரொருபால் வணங்கமாமுனிவரொருபால்
சிரம்பெறுகரங்கள்கூப்புகின்னவையிற் சிறியனும்வரவருள்புரிவாய்
மரம்பயில்சாரல்வளர்க்கழைவெடித்த மணிகள்வாசவனெதிராடு
மரம்பையர்முலைமேற்றெறிந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அஅ)

சுந்தரர்தனக்கோவினதுதோள்வலிக்கோ சொற்கலைவல்லபந்தனக்கோ
சந்தநமெனதாருயிரெனுமடந்தை சாமிநின்கலவியேவிழைந்தாண்
மந்தரமிமையங்கயிலைநீள்கந்த மாதனங்கண்டழுக்கறப்ப
வந்தாங்கமதாயிருந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (அகூ)

குறித்தொருகவிநீபாடெனப்பாடாக் கொள்கைநக்கீரனைவேண்டி
மறித்தொருகவிககாயிரந்தரின்றனையான் வலுவினிற்பாடவுமிரங்காய்
கறிக்கொடிமிளைகைத்தினறிலமர்ந்தி கலங்கிடக்கடுவன்மாங்கனியை
யறுத்துவந்தளிக்கமகிழ்திருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூ0)

நெல்விளைந்திடுதண்பணைபொறுமறுப்பு நென்முதனடவுமாறுப்போற்
புல்லியம்புயனுற்பிறப்புடனிறப்புப் பொருந்துதீவினைதுலைத்திடுவாய்
எல்லியும்பகலுங்கழையுநிர்முத்த மிளநிலாக்கதிர்பரப்புதலா
லல்லியுங்குவலையொடுமலர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூக)

வேனில்வேளெனவும்விசையனேயெனவும வீமனேயெனவுமீகில்லாப்
பாநலந்தெரியாச்சிதடரைப்புகழும் பாவலர்பவப்பிணியறுமோ
தேனிறல்வருடைபாய்தாகமிழிந்து செங்கழுநீர்ச்சுனைநிரப்பி
யானைவீழ்குழிபுகாப்புரந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூஉ)

காரிருட்குழலார்கண்வலைதுடக்குஞ் சகடனேன்சிற்றறிவொழித்துன்
பேரருட்பார்வைக்கடலகததமுழ்த்திப் பிரிவிலாவாழ்வெனக்களிப்பாய்
கூரிருள்படைத்தகிரவுஞ்சகிரிபுட் குறுமுனிகுறுகல்போன்முனிவ
ராரிருட்குகையுட்புகுந்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூங)

காவினிலருநூல்கற்ற வருதவைக் கடிந்துமெய்த்தொண்டர்பான்மிகுமா
தாவினைமருவியுடலபிமானத் தனையொழித்திடுநெறியருள்வா
யிரவினிற்காடிகுரும்பிதேர்ந்தளையை யிடத்தலுமுற்றைபோலெரியு
மாவின்மாமணிகண்டஞ்சிடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (கூச)

வாரியங்கடல்சூழ்மலர்தலையுலகில் வயிறுசாண்வளர்த்திடு பொருட்டுப்
பாரியென்றீயாதவரையான் புகழாப் பணிவிடையெனக்கருள் புரிவாய்
வீரியம்பெறுவெம்புலியினோடிராலை வேழமோடரிபகையொருவி
யாரியம்புகல்வோர்க்கேவல்செய்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௫)

ம[illegible] [illegible]வளருமாணவமல [illegible]தை வள [illegible]ம்பெறுநின்னருட்பார்வை
யி[illegible] [illegible]லிவேலாலெறிந்ததைப்போக்கி யெனதுயிர்தனைப்புரந்தளிப்பாய்
கொலையரிமுழக்குங்குஞ்சரமுழக்குங் குலவுமந்தணர்மறைமுழக்கு
மலைகடன்முழக்கினைதிரெழுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௬)

கமலவேதனைமுன்கற்சிறைப்படுத்துங் காங்கெயனுமுனைவணங்கா
முமலவேதனையுமொருசிறைப்படுத்தி முண்டகப்பதமெனக்களிப்பாய்
விமலவேதியர்செய்வேள்வியாகுதியில் வீசுநெற்பொரியெனச்சார
லமலவேய்முத்துஞ்சொரிதிருத்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௭)

சந்திரன்கறைபோலிந்திரன்விழிபோற் சந்தனமரந்துறுமகிபோன்
மந்திரம்பயிலுமுனதுசன்னிதியில் வருங்கொடியேனையுமபுரப்பா
யிந்திரநீலமருவலாற்கருமை யேந்தலாற்செவியடுத்திடலா
லந்தில்தெய்வானைவிழிநிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௮)

பிணியினுமழலாலலகையால்விலங்காற் பில்லிசூனியத்தினுற்பித்தால்
பணியினுஞ்சோரர்கள்ளரான்மருவும் பருவரலகற்றியாண்டருள்வாய்
கணியினுலாரமபுடைபரந்தெழலாற் காம்பினல்வம்பினுற்காந்த
ளணியினுற்குறமான்முலைநிகர்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௯௯)

வள்ளியுந்தெய்வயானையுமிருபான் மருவிடச்செங்கைவேலேந்தி
துள்ளியமயின்மீதேறிநீயடியேன் றுணைவிழிகாணவந்தருள்வாய்
வெள்ளியங்கிரிபோனூறதன்றினமும் வீணையின்கானமாமமுத
மள்ளியுஞ்செவியினிறைத்திடுந்தணிகை யாறுமாமுகதயாநிதியே. (௧௦௦)

தணிகை தயாநிதிமாலை-முற்றிற்று



பண்ணார்தணிகைவரைப்பாலன்றயாநிதிச்சீ
ரெண்ணருமாலையிசைத்திட்டான்-றண்ணருங்
காசினியெலாம்புகழுங்கந்தப்பனென்றுஷோக்குந்
[illegible] தசிகனுறாறுகவிதேர்ந்து.



உ

கணபதி துணை



திருத்தணிகைச் சந்நிதிமுறை.

நான்காவது

# தணிகை வேலாயுதசதகம்.



## காப்பு.

மேலாந் திருத்தணிகை வேலாயுதசதக
மாலாகிநாயேன் வழுத்தவே-நாலாஞ்
சிரத்தானைத் தானைமுகன் சேவிக்குமைந்து
கரத்தானைத் தானைமுகன் காப்பு.

சீர்பூண்டசெந்திருநோக்கமுந் திருமான்மருமகனோக்கமும்
பேர்பூண்டசங்கரிநோக்கமும் பிரியாமலேயெனையாளுவாய்
கார்பூண்டபன்னிருகைத்தலா கருணாகராதணிகாசலா
வேர்பூண்டமும்மலகாலனே வேலாயுதாவேலாயுதா. (௧)

மாண்டும்பிறந்திடுவெவ்வினை வலைப்படடாவகையென்னவந்
தாண்டுங்குறையுளதேலெனக் கதையுந்தவிர்த்தருள்செய்குவாய்
தாண்டும்பரிமயில்வாகனா தணிகாசலத்துறைசண்முகா
வேண்டுங்குறமகளன்பனே வேலாயுதாவேலாயுதா. (௨)

கோணாகழிபலபேசியுங் குரவோர்களைமிகவேசியு
நாணாமனங்கையர்மோகமாய் நற்புத்திபோய்த்துற்புத்தியான்
மாணாதவெம்பிணியாகினேன் மாயாமலேயினியாகிலுய
வீணாள்படாவகையாளுவாய் வேலாயுதாவேலாயுதா. (௩)

பூதங்குகைதனில்வைத்திடும் போதுன்னையேபுகழ்கீரனோ
ரேதந்தவிர்த்தருளும்படி யெனையாளுவாயெனநம்பினேன்
மாதங்களாண்டுகமாறினு மாறுமலெவ்வணமானவா
வேதம்புகழ்தணிகாசலா வேலாயுதாவேலாயுதா. (௪)

காடேகியும்மலையேறியும் கடிதாமருந்தவமாற்றியு
நாடேகியும்நதிமூழ்கியு நற்காய்கிழங்கிலைமாந்தியு
மோடேந்தியுஞ்செங்காவிதோ யுடைசூடியுஞ்சடைநீடியும்
வீடேதுணைப்பணியாரெனில் வேலாயுதாவேலாயுதா. (௧௩)

கல்லாதவருறவாவதிற் கற்றாருடன்பகைநல்லதே
யில்லாதகற்பில்லாளிறு மெழில்வேசையாலுறனல்லதே
பொல்லாதவீண்பழிகொள்வதிற் பொறையாமுடல்விடனல்லதே
வெல்லாதசூரனைவென்றிடும் வேலாயுதாவேலாயுதா. (௪௪)

நாளென்செயும்வினையென்செயு நடனென்செயும்விதியென்செயுங்
கோளென்செயும்பிணியென்செயுங் குறையானவற்கடமென்செயு
மாளென்றுணர்க்கெழு நும்முறி யறியர்களோவுலகோர்கள்செவ்
வேளென்றநான்மறையோதிடும் வேலாயுதாவேலாயுதா. (௪௫)

பொய்யாமுடன்மெய்யாமெனப் பொருடேடியுன்னருடேடிலா
ரையோகொடுவினையேமுறு ளயனார்விதித்ததுவோசொலாய்
மையாறிரண்டுடை யாய்திருக்கயிலாயநேர்தணிகாசலா
வெய்யோனெனக்கதிர்வீசிடும் வேலாயுதாவேலாயுதா. (௪௬)

தண்டேன்றிரெல்லுடல்கூனியே தள்ளாடியீளையுநீடியே
மண்டேன்றளார்க்கைதப்பியே மாயாமுனேயோளுவாய்
பண்டேன்றுமூம்மலவிந்திறும் பலவெம்பவவ்வினைதுன்பெலாம்
விண்டேன்றுஞானியர்நெஞ்சில்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௪௭)

ஒளியாயிருசுடராயு- லுயிராயயனரியீசனு
மளியாய்மலைகடலாறுகா டகமாயணுமகமேருவாய்
வளியாயனல்புனலெண்டிசை வடிவாய்மறைமுடிவாய்பர
வெளியாயெலாப்பொருளாகிவாழ் வேலாயுதாவேலாயுதா. (௪௮)

அற்பர்க்குலாக்கவிபாடிநா ணலையாமலேநலஞானமார்
சற்பத்தர்போற்றியநின்றிருத் தாளைப்புகழ்ந்திடநல்குவாய்
கற்பத்தருக்குழ வாழவுங் கருதாரக்ஷதர்தாழவும்
வெற்பைத்துளைத்தெழுவிக்கிரம வேலாயுதாவேலாயுதா. (௪௯)

கலையாய்ந்துபூநீர்கொண்டுநின் கழற்பூசைசெய்தழல்சேர்தரு
முலைவாய்மெழுகெனநெஞ்சநெக குருகாதவர்கருமோகதி
யலைவாய்ப்புழுதிர்சோலையே ரகமானென்குடிபானகம்
விலையார்பயங்கிரியாசனை வேலாயுதாவேலாயு . (௫0)

மாறக்காம்பலதேவரும் வசியாகருஷணமோகனம்
வீறக்காமுச்சாடனம் வித்வேடதம்பனபேதமா
மாறக்கறந்தனையெண்ணிவீ டடையுந்திருவடியார்க்கெலாம்
வேறக்காத்தாலாவதேன் வேலாயுதாவேலாயுதா. (௨௧)

பழிபூணினும்புகழ்பூணினும் பலபேசினும்பலகேட்பினும்
வழிமேயகினுந்தனிநிற்பினு மற்றொன்றுகாண்கினுமுண்கினும்
அழிவாகினுமிகவாழினு மருமாதரைப்புணர்கிற்பினும்
விழிகூரினும்மறவேனுனை வேலாயுதாவேலாயுதா. (௨௨)

மாறாதவன்புடையாருனே மருவுந்திருப்புகழ்பாடியே
பேறானமுத்தியின்மேவினார் பேயென்றவிர்ந்திடலாகுமோ
வாறாறுதத்துவமாகிய மயலாகியுந்திகழ்சண்முகா
வேறாரெனக்குனையன்றியே வேலாயுதாவேலாயுதா. (௨௩)

காடிக்குநீள்கந்தைக்குமோர் கவிபாடியேகனமூடரைக்
கூடிக்குலைந்தலையாமலுன் குளிர்தாமரைப்பதநல்குவாய்
நீடிக்கெலாம்வலமாகியோர் நிமிடத்தில்மாமயிலேறியே
வேடிக்கையாய்வருமையனே வேலாயுதாவேலாயுதா. (௨௪)

மட்டொன்றுகோதையர்மாயையான் மறையாகமந்தனைநிந்தைசொற்
றுட்டன்றனைநமனார்விடுந் தூதன்கொடுபோய்விட்டபின்
கட்டென்பனோபிடியென்பனோ கடியென்பனோவடியென்பனோ
வெட்டெனபனோகுத்தென்பனோ வேலாயுதாவேலாயுதா. (௨௫)

வளம்பாடுவேன்மயில்பாடுவேன் வளர்வாரணக்கொடிபாடுவேன்
றளம்பாடுவேன்கழல்பாடுவேன் றரிகுங்கடம்பலர்பாடுவேன்
அளம்பாய்துருப்பெனுஞானமா மமுதத்தையுன்றிருவாயினால்
விளம்பாய்திருத்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௨௬)

காய்முற்றியகதிர்மென்றினை காக்குங்குறமகடன்புடை
போய்முத்தர்போன்மிகவாடியே பொருமித்தினைமாவுண்டபின்
வாய்முத்தமுண்டிடவெண்ணியே மணவாளனையடிவீழ்ந்தவா
வேய்முத்தமீன்றருண்முத்தமே வேலாயுதாவேலாயுதா. (௨௭)

பரியுங்கவிகையுநீள்பெரும் பாரும்புதல்வருமாதருங்
கரியுஞ்சிவிகையும்வித்தையுங் காலாளுமாடையுமன்னமும்
புரியுங்கனகமும்வெற்றியும் புகழுந்தருமமுமீகுவாய்
விரியுங்கடம்பணிமார்பனே வேலாயுதாவேலாயுதா. (௨அ)

மாசந்தொறும்வருகார்த்திகை வரம்வேண்டியேயுனைநம்பியித்
தேசங்களெங்கணுமுற்றபேர் சிந்தாகுலந்தனைநீக்கிநல்
வாசங்கமழ்குழலாரொடு மகவும்பெருமையுமீகுவாய்
வீசுங்கலாமயிலேறிடும் வேலாயுதாவேலாயுதா. (உகூ)

முப்போதுமுற்பலமாமலர் முப்போதுமிந்திரனர்ச்சனை
தப்பாதுபூத்துலகெங்கணுந் தணவாவதிசயமேவலால்
எப்போதும்விண்ணவர்மண்ணவ ரினிதேத்திநல்வரமேபெறும்
வெற்பாந்திருத்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௩0)

எந்நாளுமுன்கழல்நாடவு மெந்நாளுமுன்புகழ்பாடவும
எந்நாளுமுன்னெழினோக்கவு மெந்நாளுமுன்கதைகேட்கவும
எந்நாளுமுன்பணிசெய்யவு மெளியேன்றனக்கருள்செய்குவாய்
மின்னூருமைதருமைந்தனே வேலாயுதாவேலாயுதா. (௩௧)

ஆதிக்கனாகியுமாகியே யந்தத்தினந்தமுமாகியே
பாதிக்குபாதியுமாகியே பரத்துக்குமேபரமாகியே
சோதிக்குளேயொளியாகியே தோன்றுந்திருத்தணிகாபுரி
வீதிக்குளேமயிலூர்ந்திடு வேலாயுதாவேலாயுதா. (௩௨)

நெடியோற்குநான்முகனார்க்கும்வா னிலையோர்க்கும்வெல்லருசூரனைப்
பொடியாக்கிவாசவனேமுதற் புலவோரனைவர்க்குநீழலிற்
குடியாக்கிமாதவரந்தணர் குறைநீக்கியாகமவேதநன்
மிடிபோக்கியாள்மயில்வாகனா வேலாயுதாவேலாயுதா. (௩௩)

அரவின்படநிகரல்குலா ரனுராகபோகமுநீங்கியே
யிரவும்பகலினுமுன்கழ லிணைபாடுவாரவர்சித்தமே
கிரவுஞ்சவெற்பொடுதாருகன் கிழிபட்டுவானவருய்ந்திட
விரவுஞ்சமர்புரிவீரனே வேலாயுதாவேலாயுதா. (௩௪)

சகலோகவீடும்பழனங்களுந் தனதன்படைத்திடுசெல்வமு
மிங்கோலமென்றுனைநம்பிவந் தேற்போர்க்கெலாமெளிதீகுவாய்
செங்கோல்செலுத்திடுவாசவன் சேயைச்சிறைபுரிசூரனார்
வெங்கோலழித்தருள்செல்வனே வேலாயுதாவேலாயுதா. (௩௫)

இல்லம்புவிமனைமக்கள்பொன் னிலைநட்பியுன்னிருதாளெனு
நல்லம்புயமலர்சிந்தியா நாயேன்பிறந்துழல்வேன்கொலோ
மல்லம்புயவரிமாமுகன் மடியப்பெருமுடியற்றிட
வில்லம்புதொட்டிடுமையனே வேலாயுதாவேலாயுதா. (௩௬)

தகுநாரதன்புரிவேள்வியிற் றழலோங்கிடுந்தருணத்திலே
சகமியாவுநுங்கிடுமாற்றலிற் றறுகட்கனற்பொறிசிந்திட
வெகுகோபமாயெழுமேடமேல் விரைவாகவேறியமன்னவா
மிகுவீரவாகுவின்முன்னவா வேலாயுதாவேலாயுதா. (௩௭)

காதார்ந்தவேல்விழியார்செயுங் காமாந்தகாரமுநீங்கியுன்
றூதார்ந்ததாமரைமென் மலர்த் தாளென்றனுக்கருள்செய்குவாய்
நாதாந்தனேபோதாந்தனே நவிலுங்கலாயோகாந்தனே
வேதாந்தனேசித்தாந்தனே வேலாயுதாவேலாயுதா. (௩௮)

மசானத்திறந்திடுந்துன்பமு மறித்தும்பிறந்திடுந்துன்பமும்
விசாரித்தருந்தவமாற்றிநல் வீடுற்றிடும்வகைகண்டிலேன்
பசாசுக்கெலாமிடமாகுமெம் பகையாளியூர்புகையாகவே
விசாகத்திலுற்பவமாய்வரும் வேலாயுதாவேலாயுதா. (௩௯)

கலங்காவுளத்தொடுநின்முரு காற்றுப்படையுடனின்புக
ழலங்காரமுமனுபூதியு மறியாதமானிடர்தம்மினும்
பலங்காயிலைதளிர்பூத்தினும் பலகான்றிரிதருமர்க்கடம்
விலங்காய்ப்பிறந்திடனல்லதே வேலாயுதாவேலாயுதா. (௪௰)

கருந்தாரைவேல்விழியார்செயுங் கலவிப்பெருமதுவுண்டுநின்
பெருந்தாமரைப்பதமர்ச்சியாப் பேயேன்பவந்தனைநீக்குவாய்
பொருந்தாரைவென்றொருவாசவன் புதல்விக்குமாப்பிளையாகிநல்
விருந்தாகிவெண்கரிமேல்வரும் வேலாயுதாவேலாயுதா. (௪௧)

குமராசரண்சரணென்றுனைக் கோடித்தபேர்தமைநாடியே
யெமராசன்வந்திடிலங்கவ ணிருதாளுமேயறவெட்டுவார்
அமராபதிக்கிறைதேவியா மயிராணிமங்கிலியந்தரும்
விமலாதிருத்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௪௨)

கரும்பாகும்விற்கணையாமலர் கடலாகுமாமுரசங்களுஞ்
சுரும்பாகுநாண்மதனார்விடுந் துலையாதபோர்க்கடல்வெம்பியே
யரும்பாமுலைமடமாதர்பா லலையாமலேயெனையாளுவாய்
விரும்பார்கள்சென்னியைவீழ்த்திடும் வேலாயுதாவேலாயுதா. (௪௩)

தீண்டாதநீசர்களாயினுஞ் சேவித்தபேர்தமைவானுல
காண்டார்வணங்குவருன்கழற் கன்பற்றவிண்ணவர்நீசரே
மாண்டாரெலும்பணிசங்கரன் மைந்தாதிருத்தணிகாசலா
வேண்டாதவருயிர்வாங்கிடும் வேலாயுதாவேலாயுதா. (௪௪)

அகழ்ந்தார்தமைத்தாங்கும்புவி யதுபோலிடர்புரிவோரையான்
புகழ்ந்தேபொறுத்திடுமாறுநீ புகலாய்திருத்தணிகாசலா
விகழ்ந்தார்தலையறவெட்டியே யெமனூர்விடுத்திடுசண்முகா
மிகுந்தாருகன்வலிமாய்த்திடும் வேலாயுதாவேலாயுதா. (௪௫)

மொழிபாலினுமினிமாதரார் முயங்கும்படவரவல்குலாங்
குழிவீழினுந்தனமாமலைக் கோடேறினும்மறவேனுனை
யழியாதமாதவரேத்திடு மமலாதிருத்தணிகாசலா
விழியாயிரமுடையான்றொழும் வேலாயுதாவேலாயுதா. (௪௬)

கண்டாரெலாமிகவேசிடக் கபமீறிவாய்குழறுமுனே
தண்டாமரைப்பதநல்குவாய் தழைகானிலாயிழைபோனபின்
வண்டாரையின்புறுவாலியின் வலிசிந்துமான்மருகாகுகா
விண்டாரைவேரறமாய்த்திடும் வேலாயுதாவேலாயுதா. (௪௭)

பூவாருமிந்திரநீலமுப் போதும்புனைந்திடுநின்கழ
லோவாதருச்சனைசெய்துநெஞ் சுருகும்படியருள்செய்குவாய்
தேவாதிதேவர்க்கோமனுந் திருமந்திரம்புகல்தேசிகா
மேவார்மடிந்திடவோதிடும் வேலாயுதாவேலாயுதா. (௪௮)

பாழிக்குவேண்டதனூர்விடும் பாணத்தினுலுடல்வெம்பியே
தாழிக்குள்வைத்திடுமத்துடைத் தயிரென்னநெஞ்சலையாமலாள்
சாழிக்குள்வாழ்சம்பந்தராய்க் கவிபாடநல்வழிகாட்டிடும்
வீழிக்கனிநிகர்வாயனே வேலாயுதாவேலாயுதா. (௪௯)

கந்தாவுமைமைந்தாசெழுங் கடம்பாமுருகாவென்றுனைக்
கொந்தார்மலர்கொடுபூசைசெய் குணமுள்ளவானிடரீசரே
செந்தூர்பரங்கிரியேரகந் திருவாவினன்குடிவாசனே
விந்தாசலம்புரையும்புயா வேலாயுதாவேலாயுதா. (௫௦)

சேந்தாநமோகுமராநமோ சேயேநமோவனவள்ளிதன்
காந்தாநமோவணிகாநமோ கந்தாநமோகடம்பாநமோ
சாந்தாநமோமுருகாநமோ தணிகாசலத்திறைவாநமோ
வேந்தாநமோவெனவோதுமேன் வேலாயுதாவேலாயுதா. (௫௧)

கள்ளார்கடம்பணியுந்திருக் கழலுஞ்சதங்கையுமஞ்ஞையும்
புள்ளானகுக்குடமுந்திருப் புயமாறுமேதுணையாகுமே
நள்ளாருரங்கிழிபட்டுநோய் நசிந்தின்றிடும்படிசெய்குவாய்
விள்ளாதவன்புடையேனையாள் வேலாயுதாவேலாயுதா. (௫௨)

நம்புந்திருவடியார்கண்மே னட்பாகியுட்பகைகொண்டுபோய்
வம்பும்பிணிகளுமேசெயும் வசியாகருஷணமாதியாம்
பம்பும்பசாசையுமேவினோர் பலசூனியங்களையேவினோர்
வெம்புங்குடர்த்தொடைவேய்ந்திடும் வேலாயுதாவேலாயுதா. (௫௩)

தாய்க்கும்பிதாவுக்குங்கொடா தவர்தேடிவைத்திடுகாசெலாந்
தீய்க்கும்பலபேய்க்கும்பொருஞ் செருநர்க்குநீடிருடர்க்குமாந்
தோய்க்குந்தயிருடன்மாமியார் துவர்வாயிதழுறுதுண்டுகோ
மேய்க்கும்பிரான்மருகாகுகா வேலாயுதாவேலாயுதா. (௫௪)

கொட்டும்பறையுடனென்கிளை கூசாவெனவெமதூதுவர்
கட்டும்பிடித்திடுமென்றுயிர் கவராமலேயெனையாளுவாய்
முட்டுந்நகர்திசையேறியே முடுகித்தயித்தியர்சென்னியை
வெட்டுந்திருக்கரவாளனே வேலாயுதாவேலாயுதா. (௫௫)

பெருவாதுசெய்சமயங்கொளாறும் பிதற்றும்பொருளருமாறுநின்
றிருவாயினுலொருவான்பொருள் தெளியும்படியருள்செய்குவாய்
மருவார்சிரங்கரநாசிதோள் வாய்காதுகண்செவிபாறுண
வொருவாதரிந்திடுவீரனே வேலாயுதாவேலாயுதா. (௫௬)

அழலுக்குள்வீழ்மெழுகாமென வகநைந்துநைந்துருகிச்சிறு
கழலுக்குமாமலரிட்டுனைக் கருதாமலேமடவார்கருங்
குழலுக்குமவாயிதழுக்கும்வார் கொங்கைக்குமாலுறுவோரெலாம்
விழலுக்கிறைத்திடுவீணரே வேலாயுதாவேலாயுதா. (௫௭)

மண்குத்துகோட்டிமிலேறென மதமீறினுமெனையாளுவாய்
கண்குத்துகைவிர றன்னையார் களைவார்களிவ்வுலகத்திலே
யெண்குத்துவன்மீகத்தினை யிடர்க்குந்தொறுமணிசிந்திடும்
விண்குத்துநீள்தணிகாசலா வேலாயுதாவேலாயுதா. (௫௮)

இழையாகுநுண்ணிடையார்வயி றெனும்பங்கணையின்விளைவாகியே
கழையாலையிட்டதுபோலவெங் கரியோனிவாய்வரநீக்குவாய்
மழையானையென்றறிதாவியே மருளுந்திருத்தணிகாசலா
விழையாருரங்கிழிபட்டிடும் வேலாயுதாவேலாயுதா. (௫௯)

தேருக்குளஞ்சூராணிபோற் றேகத்திலாருயிர்விண்டபின்
பாருக்குளேபுதையென்பதும் படுகானிலேசுடுமென்பது
நீருக்குளேமுழுகென்பது நினையாமலின்புறலாகுமோ
மேருச்சிலையவன்மைந்தனே வேலாயுதாவேலாயுதா. (௬௦)

குறிகாட்டியந்தகனுருயிர்க் கொலைகாட்டிவந்தழையாமுனே
முறிகாட்டியேயுனதாறுமா முகங்காட்டிவந்தருள்செய்குவாய்
செறிகாட்டிலேகிளியோட்டியே தினைகாத்தமானணைபார்த்திபா
வெறியாட்டிலேமகிழ்பூத்திடும் வேலாயுதாவேலாயுதா. (௬௧)

கட்டாரிவேல்விழியார்செயுங் கலவிக்கிசைந்திடுகாமனு
மொட்டாரெலாந்திறைநல்கிட வுலகாளுமன்னவருந்தழல்
பட்டாருயிர்விளிவார்களுந் பழநீழலேநிலையென்றெலாம்
விட்டார்களேவிளியாதவர் வேலாயுதாவேலாயுதா. (௬௨)

நீறத்துவாவிரவென்னவே நீளுங்கருங்குழன்மாதர்பாற்
காறத்துவாம்பரிதன்னினுங் கடிதோடுநெஞ்சுசைவற்றவ
ராறத்துவாவினையுங்கடந் தந்தத்துவாதசவுச்சியின்
வீறத்துவாதசைத்தலா வேலாயுதாவேலாயுதா. (௬௩)

பேரைத்தொலைத்துயர்தாருகன் பெருமாயவெற்பினையுந்தொலைத்
தூரைத்தொலைத்தரிமாமுக னாமுந்தொலைத்தொழியாதவெஞ்
சூரைத்தொலைத்தெழுமாதவர் துயருந்தொலைத்தலைமோதிடும்
வீரைக்குளேமுழுகாவரும் வேலாயுதாவேலாயுதா. (௬௪)

பட்டிக்கடாமிசையந்தகன் பாசங்கொடுவருமுன்னமே
வட்டிக்குவைத்திடுகாசெலாம் வறியோர்க்களிப்பவருய்குவார்
எட்டிக்கனியெனவண்டினோர்க் கீயாதலோபிகள்வேசைபால்
விட்டிற்கிசைந்திடமாய்வரே வேலாயுதாவேலாயுதா. (௬௫)

கடியாழிநூரதமாமுனி கழறுமுனேதினைகாத்திடுங்
கொடியானவள்ளியின்மால்கொடு குறுகிக்கணிமரமாகியே
யடியானசொல்வனவேடர்துஞ் சிரவின்கணேதிருடிக்கொடு
விடியாமுனேவருகள்வனே வேலாயுதாவேலாயுதா. (௬௬)

காலைக்குநண்பகலைக்குமிக் கலிகாலமற்புதமெய்தவே
மாலைக்குமிந்திரநீலமா மலர்மூன்றணிகழனல்குவாய்
ஆலைக்குள்வைத்தடுகன்னலி னமராடியப்புறமுற்றிய
வேலைக்குண்மூழ்கியகொக்கடும் வேலாயுதாவேலாயுதா. (௬௭)

அஞ்சக்கொடுந்துயர்செய்துநின் னடியார்கண்மேல்விடுமம்பெலாம்
பஞ்சிற்படுந்தணலென்னவே படநூறிவிட்டவர்தம்மையும்
நெஞ்சைப்பிளந்துதிரத்தொடு நிணமுண்டுதேத்தெறிவாளனே
விஞ்சைக்கிறைபணிசுந்தரா வேலாயுதாவேலாயுதா. (௬௮)

நனவிற்புரிந்திடுகாரியம் நாடோறுசெய்பவராயினுங்
கனவிற்புரிந்திடுபொய்யெனக் காணாருனைக்காணாகளே
சினவித்தயித்தியர்சேதியைத் தெரியாரெனக்குருவின்புடை
வினவிப்பொருந்திடுசெந்தில்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௬௯)

புத்தாரமுதுணுமிந்திரன் புனலாடிமந்தாரந்தரும்
தொத்தார்மலர்கொடுதாழ்வே துணைமாமலர்ப்பதமீகுவாய்
கொத்தார்கடம்புடனுசீர குறையாமதுரஞ்சித்திர
வித்தாரவண்கவியும்புனை வேலாயுதாவேலாயுதா. (௭௰)

பிறித்தாருயிர்கொடுபோய்நமன் பெரிதானதண்டனைசெய்திட
மறித்தாக்கையிற்சேராமுனே மயிமேலிவர்தெரிசனந்திடாய
பொறுத்தாற்குறையுள்தோமுனுள் புலையேனசெயும்பிழைநாடியே
வெறுத்தாற்றுணைவேறில்லையே வேலாயுதாவேலாயுதா. (௭௧)

தொடையேறுசெந்தமிழ்ப்பாடியே தொழுதுங்கொடாதவர்வாழுநிலைக்
கடையேறியிங்கிரவாமலே கழலார்ந்சிற்றடிநல்குவாய்
மடையேறிநந்தினமூங்கிடும வயல்சூழ்திருத்தணிகாசலா
விடையேறியின்புறுபாலனே வேலாயுத வேலாயுதா. (௭௨)

அழுங்குந்துயர்பலவும்புரிந் தணியாயிரத்தெட்டண்டமும
வழங்குங்கொடுங்கோலேச்சிய வாழ்சூரபன்மாவின்புடை
முழங்குந்நயித்தியர் போரிடை முடுகும்படை நகலம்யாவையும்
விழுங்குங்குறட்டியாள்சூழ்தரும வேலாயுதாவேல யுதா. (௭௩)

அடுத்தார்க்கெல்லாமருள்செய்பவ னறுமாமுகனெனும்வாய்மையாற்
றொடுத்தேன்பலகவியாதலிற் றுன்மார்க்கனென்றிகழாமலே
தடுத்தாட்கொளத்தகுமென்னை நீ தனியாகவிச்சகமீதிலே
விடுத்தாற்பழியுனைமேவுமே வேலயுதாவேலாயுதா. (௭௪)

பொன்றுமலைபொடிபட்டிடப் புனமேலழ்களுமை பட்டிடத்
துன்றுரெலாமசுணந்திர டுஞ்சும்படியுயிர்சோர்ந்திட
வன்றுளயன்புனையண்டமோ டருமாகிலங்கிழிபட்டிட
வின்றுணெறிந்தொலிசெய்திடும் வேலாயுதாவேலாயுதா. (௭௫)

கண்டேரைவாயெழில்மந்தைகூாய் கவா பும்படப்பொறிபாம்பின்வா
யுள் டேரைவாயுறுதம்பியின் றுளிர்செம்பொருபாணந்தனை
மண்டேரைமாதரைநம்பியே மகிழ்வாருனைப்புகழாமலே.
வெண்டேரைநீரெனு மாறுபோல் வேலாயுதாவேலாயுதா. (௭௬)

# திருத்தணிகைச் சந்நிதிமுறை.

மாக்குன்றமுந்தொளையிட்டிட வருதாருகன்வலியற்றிடத்
தேக்குங்கடற்புனல்வற்றிடத் திகழ்மாதவத்தவமுற்றிடத்
தாக்குஞ்சுரர்நிலைபெற்றிடத் தகுவோர்கருந்தலையிற்றிட
வீக்குங்கழற்காலண்ணலே வேலாயுதாவேலாயுதா. (௭௭)

மோகந்தருமாமாயையின் முழுகிக்கிடந்தயர்கின்றவென்
சோகந்தவிர்ந்திடுமாறுநின் றுணை மாமலர்ப்பதமீகுவாய்
மாகந்தமாதனம்வெள்ளிமா மலைவேங்கடாசலமோகம்
யேகந்தவழ்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௭௮)

நன்மைக்குநன்மையுமாகுவாய் நலமொன்றிலாப்பலதுன்பமாந்
துன்மைக்குத்துனமையுமாகுவாய் துகடீரவெங்கணுமுற்றிடும்
வன்மைக்கும்வன்மையுமாகுவாய் வலியென்றிலாதறநுண்மையா
மென்மைக்குமென்மையுமாகுவாய் வேலாயுதாவேலாயுதா. (௭௯)

காகத்திலுற்பவமாகியேழ் கடலுண்டுகாவிரிதந்துபைந்
தூரகத்தைமுட்டியவிந்தையைத் தூகள்செய்நுவில்வலனுவியுண்
டோகத்திருபாணத்தொ றுதவுந்த ரிழ்கதிரையாயினேன்
விரகத்தைநீக்கியதேசிகா வேலாயுதாவேலாயுதா. (௮0)

நகுமோ நினைத்திடுமோ புட னணிவாடுமோதுணிநீடுமோ
தகுமோமறந்திடுமோவிதழ் தாநானுமோமயல்பூணுமோ
புகுமோகுறிச்சியில்த்தினைப் புனமேயுமோகுறமானொடு
வெகுமோகமாய்வனமேசெலும் வேலாயுதாவேலாயுதா. (௮௧)

மண்ணப்பனல்வளிவானெனை வளர்பூதமைந்தினுமாரணன்
கண்ணப்படைத்திடுமிவ்வுட லுயேன்சுமந்திடலாகுமோ
வண்ணப்பதமலரீகுவாய் மயிலேறிவந்தடியேன்சொலும்
விண்ணப்பமொன்றிதுகேட்டருள் வேலாயுதாவேலாயுதா. (௮௨)

கைத்தோர்பொருளுறுகாலையே கழியாவறம்புரியாதுபொன்
வைத்தோர்செழுந்தேனீயென மடிவார்பொருள்பிறர்கொள்ளவே
பொய்த்தேவராலறியாதவெண் பொடிபூசியோர்விடைமேல்வரும்
மெய்த்தேவனீன்றருள்சண்முகா வேலாயுதாவேலாயுதா. (௮௩)

மாதாபிதாகுருதெய்வசு மனுமக்களாகியசுற்றமும்
நீதானெனும்படியெண்ணியே நினைவார்க்கருந்துணையாகுவாய்
தாதாவரந்தனையான்செயுந் தவறும்பொறுத்தருளொன்றுமுன்
வேதாவழுத்தியசெல்வனே வேலாயுதாவேலாயுதா. (௮௪)

கட்சிக்குளந்திரியின்மேவியே கண்டுஞ்சிவைகரையிற்செலும
டட்சிக்குநேருடலோடுயிர் பலவுற்றுநீங்கிடநல்லதோ
குட்சிக்குளேயகிலாண்டமுங் குலவுந்திருவுருவத்தனே
வெட்சித்தொடையணிமார்பனே வேலாயுதாவேலாயுதா. (௮௫)

பசிதாகமக்கினிமந்தநீர் படர்சீதஞ்சொடுதீவிட
மசிவாதநீள்சனியென்னுமன் னவைபன்னிரண்டுயிர்வேதனை
நசியாமலென்றனையாண்டருள் நவவீரர்முன்னவனாகவே
விசுவாசமாய்வருகாங்கெயா வேலாயுதாவேலாயுதா. (௮௬)

மதனத்தையுட்கொளுநங்கைமார் மருமத்தையாதனமுற்றெழுந்
ததனத்தைவாயமுதத்தையுண் சரசத்தைவாரளகத்தைவாள்
வதனத்தையாலுதரத்தைநல் வசனத்தைமாலுறுகொச்சையேன்
விதனத்தைநீக்கிடுமத்தனே வேலாயுதாவேலாயுதா. (௮௭)

கூம்பாதநண்பினரில்லுணுங் கூழ்காடிவானமுதாகுமால்
பாம்பாகவஞ்சனையுட்கொளும் பகையாளியில்லிடையுண்டிடுந்
தீம்பாலுமின்னமுதுஞ்சுவை செறியும்பொரிக்கறியுங்கடு
வேம்பாய்க்கசந்திடுமென்பரே வேலாயுதாவேலாயுதா. (௮௮)

கண்பாவுகானகவேடனாய்க் கையம்புவில்லொடுமேவியே
பண்பாவுமென்பெயர்முட்டைநீ பாடாயொருகவியென்னலும்
புண்பாவுவெஞ்சுரவண்மையாற் பொய்யாமொழிப்புலவோன்சொலும்
வெண்பாவுகந்தணிமார்பனே வேலாயுதாவேலாயுதா. (௮௯)

முதிராதபோரழகானசண் முகமுங்கரம்பனிரண்டுமென்
னெதிராகவந்தருள்செய்குவா யினிதானமுத்தமிழோதிடும்
மதுராபுரிக்கிறைதென்னவன் மகனாகியுக்கிரனென்றுவாழ்
விதுராதிருத்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௯0)

வானத்தினும்புவிமீதினும் மற்றெங்குநீதுணையென்றுகொள்
ஞானத்தினாலுறுவோர்க்கெலாம் நவிலொன்பதிற்குருவாகுவாய்
ஈனச்செருக்கினைநண்ணியே யெண்ணாதமானிடருக்கெலா
மீனச்சனியெனநின்றிடும் வேலாயுதாவேலாயுதா. (௯௧)

சூழ்விப்பையோபலதுன்பெலாந் தொலைவிப்பையோநிலைபெற்றிட
வாழ்விப்பையோதாழ்விப்பையோ மறித்தும்பிறப்பெனுமாழியி
னாழ்விப்பையோவகல்விப்பையோ வருளென்கொலோவறியேனையா
வேழ்விப்பொருப்பிடைவாசனே வேலாயுதாவேலாயுதா. (௯௨)

வாட்கோரைதாமரைவெங்கரா மருவுங்கிடங்கிடைவீழ்ந்தவன்
கோட்பாடுபோலுலகாசையிற் கொடியேன்விழுந்துயர்நீக்கியுன்
தாட்கேவல்செய்திடுமாறுநீ தமியேனையாண்டருள்செய்குவாய்
வேட்கோவனுயுலகந்தரும் வேலாயுதாவேலாயுதா. (௯௩)

தொகுதாரகைக்குலமெண்ணினுந் தொலையாதவெம்பிறவிக்குளே
புகுதாமலுன்னிருதாளெனும் புணைநல்கியென்றனையாண்டிடாய்
திகுதீதிமித்திமிதீயெனச் சென்றாடுமாமயில்மேல்வரும்
விகிர்தாதிருத்தணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௯௪)

மனைநீப்படும்பொழுதந்தமா மனையிற்றுயில்கொளநாடல்போற்
புனையாக்கைவிட்டுயிர்நீங்கிடும் பொழுதுஞ்சகமயனீங்கிடார்
சுனைபூத்தசெங்கழுநீர்மலர்த் தொகள்போர்த்தசேவடிநல்கியென்
வினைதீர்த்திடுந்தணிகாசலா வேலாயுதாவேலாயுதா. (௯௫)

தொடலாகுமோபிறர்மாதரைத் தொழலாகுமோபலதேவரை
யடலாகுமோபலசீவனை யறலாகுமோவுனதன்பினைப்
படலாகுமோமிகுதுன்பினைப் படிமீதில்பபடியென்னைநீ
விடலாகுமோதணிகைக்குள்வாழ் வேலாயுதாவேலாயுதா. (௯௬)

நாளும்பிறந்திறவாமலே நாயேன்முனேயுனதாதிரு
தோளுங்கழுநீரும்புடைத் துணைமாதருமயில்கோழியுந்
தாளுஞ்சதங்கையுமாகவே தணிகாசலத்திடைநின்றநீ
மீளும்படியருள்செய்குவாய் வேலாயுதாவேலாயுதா. (௯௭)

திரைசேரிருவினைமல்கிடுஞ் செநநக்கடலிடைவீழுநான்
கரைசேரவுன்னிருகான்மரக் கலமீகுவாயுனைநம்பினேன்
நரைசேர்கிழவனுமாகியே நலமார்தினைப்புனமேவிய
விரைசேர்கடம்பணிமார்பனே வேலாயுதாவேலாயுதா. (௯௮)

நீளாண்மையும்புகழும்பெரு நிலையும்பலகலையுந்திகழ்
தாளாண்மையும்பெறுவார்திருத் தணிகாசலாவெனவோதுவார்
வாளாண்மையாலுயர்சூரனார் வலிசிந்திமன்னுயிர்கட்கெலாம
வேளாண்மைசெய்திடுவள்ளலே வேலாயுதாவேலாயுதா. (௯௯)

ஈராறுகாதினிலோர்செவி யெளியேன்புகல்மொழிகேட்குமே
யீராறுகண்களிலோர்விழி யெளியேன்றனக்கருள்செய்யுமே
யீராறுகைதனிலோர்கா மெளியேனையஞ்சேலென்னுமே
வீராதிருத்தணிகாதிபா வேலாயுதாவேலாயுதா. (௧00)

தணிகை வேலாயுதசதகம்-முற்றிற்று.



உண்மைதரும்வேலா யுதசதகப்பாநூறும்
வண்மைபெறநாளும்வழுத்தும்வா-ரெண்ணமெலாஞ்
சித்திக்குஞ்சத்துருவைச் சேதிக்குஞ்சாதிக்கு
மெத்திக்குநன்மைதருமே.



கணபதி துணை

## திருத்தணிகைச் சந்நிதிமுறை.

ஐந்தாவது

# தணிகை அந்தாதி.

காப்பு.

ஆறுமுடியோ னழற்கண் டனிலுதித்த
வாறுமுடியோ னரும்புகழே—வீறுந்
திருத்தணிகையந்தாதி சேவிக்குமென்றன்
கருத்திலுறை யானைமுகன் காப்பு.

திருவும் அருளுஞ் செழிக்குமின்ப வீடு
மருவுந் தணிகைவரை வாழு—முருகன்
திருப்பாத பங்கயத்தைச் சென்றிறைஞ்சி யேத்தி
விருப்பா நினைக்கமன மே. (க)

மேவித் தணிகைவரை வேந்தனிரு தாண்மலரைச்
சேவித்து நங்குறையைச் செப்பினல்—கோவித்
திடுமோ குறையதுதீர்த் தெய்தரியவீட்டில்
விடுமோ மனமே விளம்பு. (உ)

விளம்பாய் தணிகைவரை வேலோனை யன்ப
ருளம்பாயு மின்பவுரு வானை—யளம்பாய்
துரும்பெனஞா னக்கடலிற் றோய்ந்திடா வன்றோ
இரும்பெனவென் னெஞ்சே யிளைந்து. (ங)

இயலு மிசையு மெழிநாடகமு
முயலுந் தமிழ்ச்செய் முனிவன்—பயிலரவ
மீந்த தணிகை பொழில்வரைமேல் வீற்றிருக்கும்
வேந்த னிருபதமே வீடு. (ச)

வீட்டை யடைவான் விரும்பினையே னன்னெஞ்சே
நாட்டி லுயர்தணிகை நாயகனைக்—காட்டிற்
குறத்தி பதம்பணியுங் கொற்றவனை நாளும்
அறத்தினொடும் பூசித் தறி. (௫)

அறியாச் சிறியே னரட்டையறுத் தென்று
மறியாச் சிறுதாண் மலரைக்—குறியாகக்
கொள்ளென்றான் றென்றணிகைக் கொற்றவனு மிக்கணமே
விள்ளென்றான் மேலை வினை. (௬)

வினையகற்றி நாயேனை மெய்யடியார் கூட்டந்
தனிலிருத்தி நாளுந் தணவா—தெனைநினைந்து
நில்லென்றான் றென்றணிகை நீலகிரி யான்பிறப்பை
வெல்லென்றா னன்பு மிகுத்து. (௭)

மிகுத்த வவுணரெனும் வேலைதனை வேலாற்
செகுத்த திருத்தணிகைத் தேவே—பகுத்தவறி
வில்லேற்குப் பேரின்ப மீந்திடுவை தென்றோநீ
சொல்லாய்நின் வாயாற் றுணிந்து. (௮)

துணிந்தேன் றணிகைவரைத் தோன்றலிரு பாதம்
பணிந்தே னவன்புகழ்வெண் பாவை—யணிந்தேன்மற்
றென்னைப் பிறப்பி னிறுத்தாமற் பேரின்பந்
தன்னைக் கொடுத்திட்டான் சார்ந்து. (௯)

சாருமடி யேன்றனக்குச் சஞ்சிதமுன் ஞமலத்தின்
வேருங் களைந்தின்ப வீடுதவ—யாருந்
தணிகா சலமென்று சாற்றவருள் செய்யும்
வணிகா மயில்மிசைநீ வா. (௧0)

வாவா மயிலேயெம் மங்கையுயிர் நீங்காமுன்
றேவாதி தேவன் றிருத்தணிகை—யோவாம
லுற்றவனைத் தன்னிருதா ளுற்றவரைக் காத்தளிக்குங்
கொற்றவனை நீசுமந்து கொண்டு. (௧௧)

கொண்டே னவனருளைக் கூடினேன் றொண்டரொடும்
விண்டேன் பிறவியெனும் வேலைதனைக்—கண்டேன்
றடம்பலவுஞ் சூழுந் தணிகைவரை மேய
கடம்பமலர்த் தாரான் கழல். (௧௨)

கழலணியுந் தாளுங் கனகநிற மேனி
யழகு மயிலு மயிலும்—மழலை மொழி
மாத ரிருபுறமும் வாய்ந்த தணிகைவரை
நாதனையென் னெஞ்சகமே நாடு. (கங)

நாடுமடி யாரிடமு நங்கைகுற மானுமையுங்
காடுந் தணிகைவரைக் கல்லகமுந்—தேடும்
மறைநான்கி னீறு மறவுநின்றுண் மஞ்ஞைக்
இறைவாவென் சென்னிமிசை யேற்று. (கச)

ஏற்றுக் கொடியா னெகின்கொடியான் புள்ளரசாம்
பாற்றுக் கொடியானும் பார்த்திருப்பக்—கூற்றிற்
கொடியானைக் கோழிக் கொடியாகக் கொண்டான்
செடியார் தணிகைவரைச் சேய். (கரு)

சேயோன் கொடியவர்க்குச் சேயோ னடியவர்க்குத்
தாயோன் றணிகைச் சைலத்தோ—னாயேனை
மாளாத பேரின்ப வாரி படிவித்தே
யாளாகக் கொண்டா னவன். (க௬)

அவனே யனைத்துலகு மாக்கி யழிப்பா
னவனே தணிகைவரை யண்ண—லவனேயென்
சிற்றறிவைப் பேரறிவாய்ச் செய்தா னவனுக்கு
மற்றறியே னாற்றுங்கைம் மாறு. (கஎ)

கைம்மாறு வேண்டாத கார்போற் றடுத்தென்னை
யும்மாறு செய்தென் னுளம்புக்கான்—மைம்மாறுக்
கண்ணார் விரும்புங் கடம்பணியு நீள்புயத்தான்
விண்ணோர் தணிகைவரை வேந்து. (கஅ)

வேந்தன் றணிகைவரை வேலோ னெழிற்குறத்தி
காந்தன் குகன்குமரன் காங்கேயன்—சேந்த
னறுமா முகன்றெய்வ யானைமண வாள
னுறுவானென் னெஞ்சத்தி னுள். (க௯)

உள்ளும் புறம்பு முறைந்துவினை தீர்த்திடுவான்
றெள்ளுமறை நாடரிய சீரியோன்—கள்ளுமிழு
நீலச் சுனைசேர் நெடுந்தணிகை வெற்பாளன்
கோலத்தை யேத்தினவர்க் கு. (உ0)

குன்றம் பிளந்தவயிற் கொற்றவா நற்றவர்சேர்
மன்றம் பொதியமயில் வாகனா—வென்றுந்
தணிகா சலத்துறையுந் தற்பரா வென்று
பணியா தவர்க்கென் பயன். (உக)

பயந்தே னிருவினைக்கும் பாழ்த்தபிற விக்கும்
வியந்தேனின் பாதார விந்த—நயந்தேன்
முருகா தணிகைவரை முன்னவா மாலின்
மருகா வென் பாரை மகிழ்ந்து. (உஉ)

மகிழ்ந்துமனை வாழ்க்கைதனின் மாய்ந்திடுமென்னெஞ்சு
நெகிழ்ந்து நினைநினைப்ப தென்றோ—புகழ்ந்தமரர்
போற்றுந் தணிகைவரைப் புண்ணியநின் வாய்திறந்தோர்
மாற்றங் கொடுத்திடுவாய் வந்து. (உங)

வந்தா ளுனைப்பிரிந்த மாதுமதன் பூங்கணையால்
வெந்தாள் பசலைமுலை மேற்கொண்டு நொந்தாளைத்
தந்தா ளணிகடப்பந் தாரதனைச் சண்முகவா
கந்தா தணிகைக்கு கா. (உச)

காக்குமரி மான்மருகா காரதனை யூர்தியென
வாக்குமரி மான்மருகா வாறுமுகா—நோக்கரிய
பன்னிரண்டு தோளா பகர்தணிகை வெற்பாவுன்
றன்னிரண்டு தாளெனக்குத் தா. (உரு)

தாதார் கடம்பணியுஞ் சண்முகா நற்றணிகை
நாதா குறத்திவள்ளி நாயகா—வேதாவைக்
குட்டிச் சிறைவைத்த கோமளா வந்தருளென்
றிட்டிக்கு நேரே தினம். (உசு)

தினமுந் தணிகைச் செழுங்கிரியு மன்பர்
மனமுங் குடிகொண்டு வாழ்வோன்—கனகநிற
வள்ளியோ ஞுன்மறைகள் வாழ்த்துமலர்த் தாளுடைய
தெள்ளியோன் றன்புகழே செப்பு. (உஎ)

செப்பு முடியிற் சிறுபிறையுங் கோரளவு
மப்புந் தரித்தோ னருள்குமரா—விப்புவியி
னல்லோர் தொழுந்தணிகை நாயகா நின்புகழைக்
கல்லாதார்க் குண்டோ கதி (உஅ)

கதிசெயலை வாயே ரகம்பறங்குன் றன்பர்
துதிசெய் பழமுதிருஞ் சோலை—யதிசெயஞ்செய்
நற்குன்று தோருட னல்லாவி னன்குடிபு
நிற்குந் தணிகைநிம லன். (உகூ)

நிமலன் கமல நிகர்விழியீ ராற
னமல னமலமறுத் தாண்டான்—விமலன்
கருணா கரன்றணிகைக் காங்கேயன்செவ் வேலன்
சரணம் புயமனமே சாற்று. (ஙo)

சாற்றுந் தணிகைவரைச் சண்முகனை யன்பருளந்
தோற்றுமுடி யூறுடைய சுந்தரனைப்—போற்றுகிலா
யென்னே கலகவிழி யேந்திழையார் மால்கொண்டா
யன்னேயென் னெஞ்சே யழிந்து. (ஙக)

அழிந்து பிறந்துழலு மாக்கைதருந் துன்ப
மொழிந்து நினையுறவ துண்டோ—வழிந்த
மதுவொழுகுங் கல்லார மார்பா தணிகைப்
பதியுறையுஞ் சேயே டகர். (ஙஉ)

பகரா யொருவசனம் பாவியே னுய்ய
நிகராரு மில்லாத நித்தா—நகராந்
தணிகைவரை மீதுறையுஞ் சற்பரா வைவே
லணிகையக லாதவம ரா. (ஙங)

அமரா பதிகாத் தவுணரெலா மாளச்
சமராடி யேதணிகை சாருங்—குமரா
குறிஞ்சிக் கிறைவாநின் கோலத்தைக் காட்டாய்
பிறந்திறக்க மாட்டேன் பிரிந்து. (ஙச)

பிரியே னுனையான் பிரிந்தோர் கணமுந்
தரியே னுடல்பிரிந்து சாவேன்—கரியோன்
மருகா தணிகைவரை மன்னு வடிவேல்
முருகா வருவாயென் முன். (ஙரு)

முன்னு மிருபுறமு மூதறிவி லாச்சிறியேன்
பின்னுந் துணையாகிப் பேசுமே—பன்னுமறை
நாலுமெழுந் தோலமிடு நற்றணிகை மால்வரையின்
மேலுறையுங் காங்கேயன் கை வேல் (ஙசா)

வேலா குமரா விசாகா வுமையளித்த
பாலா தணிகைவரைப் பார்த்திபா—தோலாத
தாருகனைக் காய்ந்தருளுஞ் சண்முகா வென்றிருகண்
ணீருகநெஞ் சேயுருகி நில். (௩௭)

நில்லாம லோடியுழ னெஞ்சே தணிகைவரை
செல்லா யறுமுகனைச் சேவியாய்—பொல்லாத
தீயேன் குறைகளையச் செப்பாயிம் மாத்திரஞ்செய்
யாயே லிறந்திடுவன் யான். (௩௮)

யானும் பிரிந்திருக்க இல்லேன் றணிகைவரை
யானுமெனை நீங்கியமர் இற்றிலான்—கானவரை
போலுமவன் றோளழகும் பொற்சதங்கை தண்டையணி
காலழகும் வேலழகுங் கண்டு. (௩௯)

கண்டாள் தணிகைவரைக் காவலனைக் கண்டுமையல்
கொண்டா ளவன்பெயரே கூறுவாள்—வண்டேறுந்
தாதேய் கடம்பமலர்த் தாரதனைக் கைக்கொண்டாள்
மாதேயான் பெற்றசிறு மான். (௪0)

மானையுஞ் சேறணிகை மால்வரைவா ழுங்குமரன்
றானையுங் கொண்டெதினைச் சாருமே—தாநீருந்
தண்மலருங் கொண்டவனற் றண்மலரை யர்ச்சனைசெய்
கண்மலர்நீர் சோரக் கசிந்து. (௪௧)

கசிந்து மனமுருகிக் கண்ணீர் பெருகி
யொசித்த வுடற்புளக முற்றே—யிசைந்துநினைப்
போற்று முழலும் புலையனே னுய்வகையென்
சாற்றாய் தணிகா சலா. (௪௨)

தணிகா சலத்துறையுஞ் சண்முகா வென்று
பணிகா சலந்தவிரப் பாடு—துணிவாகச்
சிந்தித் திடுமனமே செந்நாவே நன்னெஞ்சே
வந்துற் றிடுமெ பெரிய வாழ்வு. (௪௩)

வாழ்ந்துனருந் தென்றணிகை மால்வரையைக் கண்டுமுடி
தாழ்த்துனருந் தீவினையைத் தாழ்த்துனரே—கேழ்த்தமயிற்
செய்யோ னமரர் சிறைமீட்ட மூவிலைவேற்
கையோன் திருப்புகழைக் கற்று. (௪௪)

கற்றவரைக் கைக்கொண்ட கண்ணுதலோன் செய்புகழ்க்
கற்றவரைச் சேராயெங் கன்னெஞ்சே — மற்றவன்வா
ழோங்கற் றணிகைதனை யோர்கணமுன் னாய்பிறவி
நீங்கக் கசிந்துருகி நின்று. (௪௫)

நின்ற பொழுதுமவ னீங்கி நெடுந்தூரஞ்
சென்ற பொழுதுந் திருத்தணிகைக் — குன்றுறையுங்
கோமானை நெஞ்சிற் குடியேற்றி னேன்குறத்தி
பூமானுக் கேயடிமை பூண்டு. (௪௬)

பூண்டிலையே நற்றணிகைப் புண்ணியனு ருக்கடிமை
மாண்டிலைநீ யென்பெறுவான் வாழுதியோ — கோண்டவழு
மென்னெஞ்சே வன்னெஞ்சே யேதுரைத்தா லுங்கேளாக்
கன்னெஞ்சே யித்தரையின் கண். (௪௭)

கண்ணா றிரண்டுமொளிர் கைத்தலமோ ராறிரண்டும்
பண்ணார் பதமிரண்டும் பாவையர்மா — னெண்ணாம்
வதனமொரு மூவிரண்டும் வண்டா மரையே
முதிர்தணிகை வாழ்முருகற் கு. (௪௮)

முருகன் குகன்குமரன் முன்னவனஞ் சேய்தன்
னுருவங் கவர்ந்தானென் றோர்ந்தே — மருவமரும்
பூங்கணையி னானைப் பொடியாக்கிற் றல்விமலன்
றீங்கணையா நெற்றிவிழித் தீ. (௪௯)

தீங்கவிதை செந்தமிழாற் செய்தணியும் பாவலரைத்
தாங்குவன்யா னென்றெவருந் தாமறிதற் — கோங்குமுரு
காற்றுப்படையியம்பு மப்புலவ னைப்புரந்தான்
சாற்றுந் தணிகையர சன். (௫௰)

அரசன் றணிகை யறுமுகற்கு நெஞ்சே
யுரைசெ யொருசொலுனை யுள்ளிக் — கரைசெய்
விழிநீர் பொழிவானை மேவாயேற் றுஞ்சும்
பழிசாரு முன்னையெனப் பார்த்து. (௫௧)

பாரோர் புகழ்தணிகைப் பண்ணவனார் செய்பரிசங்
காரே யறிகுவரீ தற்புதமுன் — னீர்மேவு
கொக்கை மயினுமுயர் கோழியுமா கக்கொண்டான்
மிக்ககதிர் வேலதனை விட்டு. (௫௨)

விட்டா யிலையலை வேட்டணிகை யாற்கடிமைப்
பட்டா யிலையெனது பாழ்நெஞ்சே—கெட்டாய்கேண்
மாதெற் றிருந்தனைமை வந்தழைக்குந் தண்டதரன்
றாதற்கென் செய்வதுதான் சொல். (௫௩)

சொல்லுவதெ லாந்தணிகைத் தோன்ற றிருப்புகழைப்
புல்லுவதெ லாமவன்றன் பொற்கழலைக்—கல்லுவது
மேலைப் பிறந்துழலும் வெய்யவினைக் காதரமா
மூலத்தை நெஞ்சே முனிந்து. (௫௪)

முனிநா ரதன்மொழிய மொய்குழலாள் வள்ளி
தனியே தினைகாக்குஞ் சாரற்—புனமேவுஞ்
செங்கமலத் தாடா திருத்தணிகை வெற்பாவென்
பங்கமலந் தீரப் பரிந்து. (௫௫)

பரிமா மயிலாடு பண்ணவர்கோன் வெள்ளைக்
கரிமாவு மூர்த்தணிகைக் கந்த—னரிமான்
வதனன் கரிவதனன் மானமேவற் சூரன்
சிதறவுயிர் போக்கினான் சென்று. (௫௬)

செல்லு முகிலே திருத்தணிகை வெற்பினிற்போய்
நில்லும் அறுமுகன்மு னேர்பட்டுச்—சொல்லும்
அடியேன் படுந்துயர மத்தனையு மின்னே
பொடியாகிப் போகும பொருட்டு. (௫௭)

பொருள்சேரும் பொன்னுலகப் பூவை யிடமாய்
மருவூர் குமரன் வலமா—வருள்சேரு
நீயு முயர்தணிகை நின்றமெவ னேகொடியேன்
வாயுமுனை வாழ்த்தாத வாறு. (௫௮)

வாழ்த்தாத வாறரிய வாயு மவனடியிற்
றாழ்த்தாத் தலையுமவன் றன்னுருவை—யாழ்த்தா
மனமு மெனக்குவிதி வைத்தான் றணிகைப்
புனிதன் றிருக்கோயில் புக்கு. (௫௯)

புக்க துயரம் பொருந்தா விழியிமைகண்
மிக்கசன வேள்கணைகண் மேனியெலா—முக்கட்
பரம னருள்தணிகைப் பாலகன்மால் கொண்டாங்
கிரவும் பகலுமிவட் கு. (௬௦)

இவளுமத னம்பா லீர்ங்கவுண்மா வுண்ட
கவள விளவின் கனிபோற்—றுவளுங்
குமரா வறுமுகவா குன்றூர் தணிகை
யமரா குகாவென் றழைத்து. (௬௧)

அழைத்துநமன் றூதுவர்க ளாங்குகொடு போமுன்
றழைத்த திருவருளைத் தாராய்—புழைக்கை
மதவா ரணந்திரியும் வண்டணிகை மேலா
யுதவா ரணவா வுவந்து. (௬௨)

உவந்து ககனமிசை யூர்வெண் மதியே
யிவர்ந்து தணிகைவரை யிற்போய்ச்—சிவந்தகழற்
பைந்தோகை மேலான் படிவமுனந் தீண்டியென்றன்
செந்தோளை நின்கரத்தாற் றீண்டு. (௬௩)

தீண்டற் கரிய திருமேனிப் பூச்சுமல
மாண்டற் குரியதிரு வெண்ணீறு—மீண்டெனக்குத்
தந்தா னவனடியிற் றாழ்ந்துதரித் துட்கொண்டேன்
கொந்தார் தணிகைவரைக் கோ. (௬௪)

கோட்டமரும் பைங்கிளியே கூறாய் தணிகைவரைக்
கோட்டமரு நங்கள் குமரேசன்—றாட்டுணைக்க
ணன்பா மருணகிரி நாத னறைந்தபுக
ழின்பாயென் கைவந் திருந்து. (௬௫)

இருந்தாந் தணிகை யிளையா னடிக்கீழ்ப்
பொருந்தா மினிப்பிறவிப்—புக்குவருந்தா
முருந்தா நகையாரை முன்னின் றெடுத்த
வருந்தா யெனநெஞ் சடுத்து. (௬௬)

அடுக்கிய வண்டங்க ளாயிரத்தோ டெட்டுந்
தொடுக்கு மரசுடைய சூர்மே—லெடுத்தெறிந்த
சத்தி தனக்குத் தணிகையா யென்வினையைக
கொத்தியெறி யென்றொருசொற் கூறு. (௬௭)

கூறு முகங்களெலாங் கோணைபெறு நற்றணிகை
பாறு முகவ னடிதொழயாஞ்—சேறுங்
கொதிக்கு மெமது கொடுவினைகா ணீவீ
ரிதற்குமுனஞ் சென்மி னெழுந்து. (௬௮)

எழுந்து புடைபரந் தீர்க்குமிடை போகா
தழுந்து மணிமுலையா ராசை—யொழிந்துமுனஞ்
சொற்கந் தனைப்புரந்த தூயவனைத் தென்றணிகை
நற்கந் தனைமனமே நம்பு. (௬௯)

நம்பிச் சரவணத்தி னற்றீர்த்த மாடியெழுந்
தம்பொற் றணிகை யறுமுகவன்—செம்பொற்
றிருவா லயத்தைவலஞ் செய்வோர்க்கு முண்டோ
கருவா லலையுங் கடன். (எ0)

கடந்தா ரெழுபிறப்புங் காழ்மலங்கண் மூன்று
மிடந்தார் வினையிரண்டு மிற்றார்—தடஞ்சாரல்
வேழந் திரியும் வியன்றணிகை வெற்பனடி
தாழு மடியவர்க டாம். (எக)

தாமே சராசரங்க டம்மைப் படைத்தழிப்பார்
தாமே யனைத்துலகுந் தாங்குவார்—தாமே
தணிகைவரை மீதுறையுஞ் சண்முகவ ரென்றோர்
கணிகவினை வாராமல் கடிந்து. (எ௨)

கடியார் பொழின்மாங் கனிகோதி யங்கட்
குடியாகி வாழுங் குயிலே—யடியா
ருளத்திற் சிறந்த வுயர்தணிகை யானைக்
குளத்திற் பிறந்தானைக் கூவு. (எ௩)

கூவிற் குளத்திற் குழந்தையுரு வாயமர்ந்தா
டாவின்முலைப் பாலளித்த தாயர்பெயர்—மேவுநாட்
கார்த்திகைநா றுந்தணிகைக் கந்தனைச்சென் றேத்தினவர்க்
கார்த்திடுவன் பேரின்ப மாங்கு. (எ௪)

ஆங்கோர் கனிக்காமுன் யானைமுக னோடிகலித்
தாங்கோதை மஞ்ஞை தனைக்கடவி—நீங்காத
வண்டம் பலவு மரைக்கணஞ்சூழ்ந் தோனீல
கண்டன்மகன் வாழ்வுதணி கை. (எ௫)

தணிகைவரை யைச்சூழுந் தாணற்று ணேரே
பணிகை யழகியகை பாடு—மணிநாவே
நன்றே நினைக்குமனை நன்மனங்கா ணுங்கணன்கண்
டென்றோர் செவிநற் செவி. (எ௬)

செவிவாய்கண் மூக்குடலாய்ச் செப்புபொறி யைந்தி
னவிவாய் மனனே சென்றந்தோ—கவிவாய்ந்த
கோடரஞ்சூ ழுந்தணிகைக் குன்றுறையுங் கொற்றவனை
நாடரணாய் வாரா னமன். (௭௭)

நமரங்காள் வம்மின்க ளாம்போய்த் தணிகைக்
குமரன்றாள் வீழ்ந்து குறைகூறிற்—குமரனருள்
செய்து நமதுகுறை தீர்திருந்தானே
லெய்தும் பழியவனுக் கின்று. (௭௮)

இன்றியமையா தவர்க்குந் தணிகைவரைக்
குன்றுறையுஞ் சேயோன் குரைகழல்கண்—மன்ற
வதனாலதனை யருச்சிக்க வேண்டும்
புதுநீர் மலர்கொண்டு போந்து. (௭௯)

போந்து நமைக் கூற்றம் பிடித்திடரைச் செய்யாமு
னேந்தகமோர் கைக்கொண்ட நாயகனைக்—காந்துந்
தணிகைவரை மீதுறையுஞ் சண்முகனை நாளும்
பிணியகல வாயாரப் பேசு. (௮௦)

பேசுந்தணிகைப் பெருமான் பெரும்புகழே
வீசுந்திருப் புகழாய் வீறியதே—யேசுமற்றை
விண்ணோர் புகழ்சிறிதாய் மேவுஞ் சிறப்புமுன
நண்ணாது நாளு நலிந்து. (௮௧)

நலியும்பிறவி நடுக்கடலுள் வீழ்ந்து
மெலியுஞ்சிறியேனை மேவா—வொலிசெய்
தருவித்திரடா ழருந் தணிகை வெற்பா
பொருவில் கருணை பொழிந்து. (௮௨)

பொழிந்தார்கள் கற்பகத்தின் பூமாரி விண்ணோ
ரழிந்தா ரழியா வசுரர்—மொழிந்தார்
கருப்பைப்பு காத்தணிகைக் காங்கெயன் கைவேலாற்
பொருப்பைப் பிளந்தெறிந்த போது. (௮௩)

போதன் சிரத்திற் பொறியான் றணிகைவரை
நாத னமதுசிர நான்கினையு—மோதிக்
கரத்தாற் புடைத்தருளுங் கந்தனடியானென்
றுரத்தான் மனத்தா லுணர்ந்து. (௮௪)

உணர்ந்தார்க ணெஞ்சத்தி னுள்ளே யொளிருந்
தணந்தார்க ணெஞ்சந் தணக்கும்—பணந்தாழும்
பாந்தளெனக் காந்தள் பருதியைத்தீண் டுந்தணிகை
சார்ந்தகும ரேசனிரு தாள். (அரு)

தாளிற் சதங்கையொடு தண்டை கலகலெனத்
தோளிற்கடப்பந் தொடையசைய—நாளுமணி
வேயின் றுளிர்தணிகை வெற்பயாங் கெய்திடினு
நாயேற்கு முன்னே நட. (அசு)

நடந்தன றணிகைவரை நாதனைச்சென்
கடந்தே னெனதுபவக் காட்டைக்—கிடந்தே
னிறவாத வீட்டி லிருமூ வெழுத்து
மறவாம லென்மனத்தே வைத்து. (அஎ)

வைத்தலைவேல் முத்தலைவேல் வாழ்தணிகை மால்வரையான்
கைத்தலைவேல் தானவரைக் காய்ந்திடுவே—லத்தலைவேல்
கண்டா னெனதுளத்திற் கண்டானி லாளேட்டங்
கொண்டான் றன்னூரைக் குறித்து. (அஅ)

குறியிலே னல்ல குணமிலேன் மெய்ம்மை
நெறியிலே னன்னெறியி னிற்கு—மறிவிலே
னுயினே னுயினே னுதலறிந் தென்னுளத்தே
மேயினான் றென்றணிகை வேள். (அகூ)

வேளுக் கபயமவன் வேலுக் கபயமிரு
தாளுக் கபயந் தணிகையான்—றோளுக்
கபயமவன் வள்ளிதெய்வ யானையெழின் மஞ்ஞைக்
கபய மபய மபயம். (கூ0)

அபயவா தங்கண்டே னறிருதோள் கண்டேன்
உபயபதங் கண்டுளத் தள்ளூறுஞ்—சபையடியார்
மேவுந் தணிகைவரை வித்தகனுக் காளானேன்
சாவும் பிறப்புந் தவிர்ந்து. (கூக)

தவிர்ந்தேன் பிறவி தனைத்தணிகை வெற்பி
லிவர்ந்தேன் பருதியன் னிரண்டு—மவிர்ந்தோ
ருருக்கொண்டா லென்ன வொளிர்மேனிச் செவ்வே
டிருக்கண்டே னுள்ளந் தெளிந்து. (கூஉ)

தெளிநீரின் மொக்குளெனச் சேர்ந்தவினை யாக்கை
விளிநீர்மை கண்டிதனை விட்டு—வளிநீர்தீ
மண்வான் மதியரியான் மாவடிவா னைத்தணிகைப்
பண்பானை வாயாற் பழிச்சு. (௯௩)

பழியும் பிணியும் படுமுடலென் றேனு
மழியு மழியு மழியு—மொழியுமிது
வென்னென் றிராம விதற்குமுன மேதணிகை
மன்னனைச் சார்ந்தேகொள் வாம். (௯௪)

வரங்கொண்டார் தென்றணிகை வள்ளலைச் சென்றேத்தி
யரனயன்மா னந்திவிசும் பாள்வோன்—சுரர்முனிவர்
நாரதன்சே டன்றமிழ்செய் நன்முனிவன் வாசுகிவன்
பாரதி யிராமனிவர் பண்டு. (௯௫)

பண்டே தொடங்கியுனைப் பாவித்து நிற்பேனைக்
கண்டே யுனது கடைக் கண்பாராய்—வண்டேறும்
பூமருவுங் கல்லாரப் பூஞ்சுனைக ளேசெறிந்த
காமர்தணி கைக்காங் கயா. (௯௬)

கையர் கயவர் கரவர் படிற்றொழுக்கர்
பொய்யரிவர் நட்பென்று மூறுதே—செய்யமணி
கான்றிருடங் காது கதிர்செய் தணிகைவரை
மான்றிருடன் றாள்சேர் மதித்து. (௯௭)

மதிக்குந் திறலுடைய மாசூர பன்மன்
ப[illegible]கன் வளங்கள் பலவுந்—துதிக்குந்
திருத்தணி கையிற் செறித்துச் சீபூரணப்பே
றிருத்தினன் வைவே லிறை. (௯௮)

இறையைத் தணிகைவரை யேந்தலையோர் நான்கு
மறைசொற் பொருளையன்பர் வாழ்வைப்—பொறையின்
மறந்திருந்தும் வேலோனை வாழ்த்திடுமோ பெற்றேன்
பிறந்திறந்தும் யான்பெற்ற பேறு. (௯௯)

பேறுதரு மாமயிலோன் பேரின்ப மாந்தணிகை
யாறு முடியோ னறுமுகவன்—சீறடியைச்
சார்ந்தாரைச் சார்ந்தாரைச் சார்ந்தாரைச் சார்ந்தாரைச்
சேர்ந்தாரைச் சேருந் திரு. (௧௦௦)

தணிகை அந்தாதி-முற்றிற்று.



வெண்பா வந்தாதி வியன்றணிகை வேலவற்கு
பண்பார் தமிழ்நூறும் பாவலர்மு—னண்பாக
வோதினன் கச்சியப்ப வெண்முனிவன் றாள் பணியு
நீதியாங் கந்தப்ப னே.



உ

கணபதிதுணை.

# திருத்தணிகைச் சந்நிதிமுறை.

ஆறுவது

# தணிகைகலம்பகம்.

வெண்பா.

நலம்பகமுன்ஞன் குடைய நற்றணிகை வேலோன்
கலம்பகத்தைப் பாடவழி காட்டுஞ்-சிலம்பகஞ்சேர்
வாலிபத்தி கண்டெடிராங்தோர வன்மைதங்தோன் மைந்தனென்றும்
வாலிபத்தன் வாலிபத்தன் வந்து.

நீர்கொண்ட சடைமுடியோ னெற்றிவிழிகளிற் பிறந்து
சீர்கொண்ட சரவணத்தின செங்கமல மிசைவளர்ந்து
கார்த்திகையின் முலைப்பாலுங் கவுரிமுலை பாலுமுண்டு
ஆர்த்திரைக் கடலிடைச்சென் றசுரர் குலங்களைத் துலைத்து
தேவர்சிறைதனைமீட்டுத் தெய்வ மடப் பிடிமணந்து
மூவர்தொழுந் திருத்தணிகை முதுகிரியி லெழுஞ் சுடரே.

இவைமூன்றுந் தரவு.

தீராத பவப்பிணியின் றிருக்களைத்து நீகடைக்கண்
பாராதபோ தொருவர் பாற்றுவது தானுண்டோ
வேராரும் பயிர்வாட்டும் வெங்கோடை விசும்பின்மழை
நீராரப் பெயினன்றி நீங்கிடுமோ றெங்ஙனே
பூமிமுத லண்டமெலாம் பொருந்தியிடுஞ் சராசரங்கள்
நீமனத்தி லொருங்கிமிட நினைக்க வளர்ந்தோங்கிடுமே
காமருவும் புனற்கரையிற் கருவுயிர்த்துச் செய்மையுறு
மாமைதன் பார்ப்பைக் கருதினன்றியது வளராதே
தருமங்கள் பலசெயினுந் தவந்தான மிகச்செயினு
முருகென்று மொழிந்திலரேல் முத்திநலமிழந்தவரே
பிரமன்சங்கரன்மாயன் பினுந்தேவர் யார்க்குமுனை
குருவென்று நான்மறையுங் கூசாமற் கூப்பிடுமே.

இவையாறுந் தாழிசை.

உலகொரு நொடியினில் வலம்வரு மயிலினை
யலைகட லொருமலை கெடவிடு மயிலினை
மணிகணில் கணிலென வறைதரு கழலினை
பணிமணி வெயில்விரி பலகிரி மருவினை
யடியொடு நடுமுடி வறிவரு மருவினை
பொடியணி யடியவர் புகழ்தரு முருவினை.

இவையாறடியராகம்.

குன்றுதோறாடல் பரங்குன் றலைவாயே ரகஞ்சீர்
துன்றுபழமுதிர் சோலை தொகுமாவி னன்குடியாய்த்
தானவரை வேரறுத்துச் சயந்தனுறு துயர்நீக்கி
வானவரைப் புரந்துசசி மங்கிலியந் தங்களித்தோய்
நாரணன் வாசவன்பரம னான்முகனால் வெலற்கரிய
சூரனுட றுணித்துமயில் சூட்டுவாரணஞ் செய்தோய்
பொருகாற்றி லலைசருகிற் பூதமிடர்செயுங் கீரன்
முருகாற்றுப் படையியம்ப முன்வந்து தோன்றினையே
மடமுனிந்து செந்தமிழை வளர்த்து மலையத்திருந்த
குடமுனிக்குப் பேரின்பங் கொடுத்தது நின்றிருவடியே
கருப்புகழாம் பிறசமையக் கதைகேளா தனுதினமுன்
திருப்புகழை யுரைப்போர்க்குச் சித்தியெட்டு மெளிதாமே.

இவையாறுமிருமடித்தாழிசை.

மாலைநீந்துநீ வேலையேந்துநீ வாழ்வதாக்குநீ தாழ்வுபோக்குநீ
மறைகளாயினை குறைகள்போயினை வனிலாவினை புனமுலாவினை
மதிநிறுத்தினை துதிபொறுத்தனை மலமறுத்தனை நலமுறுத்தினை.

(இவையெட்டுமெய்போதரங்கம்-எனவாங்கு)

தனிச்சொல்.

தொண்டர்கள் புகழ்தரு சுப்பிரமணிய
மண்டிலமதிமுக வள்ளிநாயக
யுன்றிருவடியை யுளந்தனிலிருத்திப்
பன்மலர்தூவிப் பணிகுவன்யாமே

இறந்தும்பிறந்து மிருவினைக்கயிற்றில்
யாப்புறுமுடலினா சையைத்துறந்து
மன்பொடுகெழீஇ இன்னருள்புரிந்தும்
மேலாம்வாழ்வுபெற்றவர் காலாற்பணிப்பதென்
கைகளாற் செயவே. (க)

இதுசரிதகம்.

வெண்பா.

வேதாகமங்கள் மிருதிபுரா ணங்களெல்லாம்
தூதாவெனுந்தணிகைச் சண்முகவா — வாதா
பணிகுடம்பை யஞ்சும் பரவைவிதம் பந்தாட்
கணிகடம்பை நீங்கு மலா. (உ)

கட்டளைக்கலித்துறை.

அலரம்பையேந்து மணங்கற்கு மைத்துணராந் தணிகை
இலரம்பை மைந்தர்களுந் தூதுசெல்லாம விரும்பொழிலிற்
பலரம்பையின் கனியாங்க ளிகோதிடும் பைங்கிளியே
நலரம்பையா மெங்க ணங்கையுள் வாடுவ னனெஞ்சமே. (௩)

கழிநெடில் விருத்தம்.

நெஞ்சகமுருக்கும் வஞ்சியர் களப நெடுமுலையணைதர நினையே
னின்றிருத் தணிகை மலையணைதாற்கு நித்தலும் நினைத்திடல் வேண்டும்
வஞ்சகம் புரியு மவரலங்கார வறுப்புகழ் வேண்டிலேன் வேண்டும
வரம்பெறு மருண கிரிநினை முன்னாள் வழுத்தலங்காரமும் புகழுந்
தஞ்சகப்படைப்பின் றருகநினு லணைந்துன ருமறை மலர்ப்பதம் பணியாச்
சதுமுகன்சிரங்கள் குழிந்திடப் புடைத்துச் சகமெலா நொடியினிற் படைத்து
மஞ்சகஞ் சூழும் வேங்கட வரையின் வந்தகலாதுவீற் றிருந்து
வள்ளியோனாகி யுள்ளினோர்க் கருளும் வள்ளலே வள்ளிநா யகனே. (௪)

நெடில் விருத்தம்.

நாயகனாகி நீயிருந்திடவு நாயக னிலாத வேசையர்போற்
றூயகட்டுதித்து மரித்திடுந் தேவர் தம்மையான் விரும்பிடத் தகுமோ
சாயகந்துரக்கும வேடர்கற்புயத்திற் றமதுகட் சாயகந் துரந்து
தோயுகமுருக்கு மறத்தியர்பயில் தொகுந்தணி காசலச் சுடரே. (௫)

## நெடில் விருத்தம்.

சடாறுருமகத்திரு டுலையுமா யும்போ
லிடரிலலிணைப்பணிந் தேத்துவோர்தமக்
குடலுயிர்விளைமல ருரையதன்பொருட்
டொடர்பினெங்கணு முருந்தணிகைத்தோன்றலே. (௬)

## அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

தோன்றிய வனைத்துங்காயந் துலைந்திடு வகையுமாகி
முன்றெனு மதைச்சிறுலே முழுவதும் யாமெனன்றெண்ணிக்
கான்றசோ றெனவிடுத்தி காதலை யுலகத்தெவரு
னேன்றசீர்த் தணிகைவெற்பி னெழில்பெறு குமாரவேளே. (எ)

## கழிநெடில் விருத்தம்.

வேளின்கருப்புச் சிலைமலரே வேதனெழுதுந் தலைப்பொறியே
மீளிநமன்கைப் பாசமே வேறுவேறு நீங்களெனை
நாளுந்துயர்செய் துலைத்தீர்கள் நான்போய்த்தணிகை வரையிலிவர்ந்
தாளும்பெருமான் திருமுன்ன ரறைவே னெனைவிட் டகல்வீரே. (அ)

## நெடில்விருத்தம்.

வீரவாகுவைமுதலிய வொன்பது வீரர்க்கு முன்றோன்றல்
பேரவாகுவையூர்ந் திடுகரிமுகப் பிள்ளைக்குப் பின்றோன்றல்
ஆரவாகுவையி ரண்டிறே டிரண்டிறே ளருட்டணிகையி னெஞ்சே
சேரவாகுவை யாம்பழி நீங்கிநற் சிவகதி பெறலாமே. (௯)

## மறம்விருத்தம்.

மேலாமரசன்றூத னெனவிளம்பு மொருவ யாந்தணிகை
வேடன் றனக்குவள்ளி தனைவிரும்பிக்கொடுத்த வேடர்காண்
மாலாயெங்கள் குலமகளை வதுவை பேசினை விடுத்த
மன்னன்குரு பத்தினியுடனே மருவுந்தூர்த்தன் றன்குலமோ
சாலாமடந்தை யுருவாகித் தாழ்ந்தசா லிலா முடவன்
றனைக்கூடி யொருகுரங்கு தனைப்பெற் றெடுத்தோன் சிறுகுலமோ
வேலாமகத்தி லொருவீர னீரக்குறைந்த கரமுடையோ
னிழிபாங்குலமோ வெருவாம லியம்பாய் தியங்கி மயங்காதே. (௧௦)

## நெடில்விருத்தம்.

காதலா யொருமயிலிற் களித்தேறுந் தணிகைவரைக் கந்தன்யார்க்கு
நாதனே யெனத்தெளிந்த வருணகிரிநாதனுமுன் னவின்றபாவை
யோதுவார் திருப்புகழென் றலகிலுள்ளோ ரதற்குநிகருண்டோமற்றைச்
சாதலார் விண்ணவர்க டம்புகழைத் திருப்புகழாய்ச் சாற்றிடாரே. (கக)

## ஐந்சீரடிவிருத்தம்.

சாற்றுங்கோள் டென்றணிகையில் வேலோன்சரணத்தைப்
போற்றுங்கோள் புதுமாமலரிட்டுப் புகழ்மின்கள்
பாற்றுங்கோள் நும்பாலினைடைந்தாா பசிநோயை
மாற்றுங்கோ ளுலகத்தினிலோடு மனமன்றே. (கஉ)

## எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

அன்றுநில மன்றுபுன லன்றுகன லன்றுவளி யன்றுவெளி யன்று நவகோள்
துன்றுபுல னன்றுபொறி யன்றுமன மன்றுடரு வனறுமுயி ரன்று துகடீர்
குன்றுதொறு நின்றசுரர் சென்றுதொழ வங்கவுணர் குன்றவயி லொன்றுவிடுநீ
தென்றணிகை யங்கிரியி னன்றுபர மன்செவி திருந்தமொழி கின்ற பொருளே.

## வெண்பா.

பொருளுங் குலமும் புவியும் புகழும்
அருளுமழகு மறிவுந்—தெருளுந்
தணிகையா யன்பருளந் தங்குவாய் வைவே
லணிகையா வென்பவர்க்கே யாம். (கச)

(தலைவிதுன்பந் தலைவற்குப் பாங்கி யுரைத்தல்.)

## கட்டளைக்கலித்துறை.

ஆங்கலைக்குங் கலைக்குஞ் சம்பராரியடு கணைக்குங்
கோங்கலைக்குங்கலையத் தனத்தாளச்சங் கொண்டுவிடப்
போங்கலைக்குங்கலைக்கு கணக்கில்லைப் பொருப்புர்கைவிற்
றாங்கலைக்குங்கலை மான்பாய்தணிகைச் சயிலத்தனே. (கரு)

## சந்தவிருத்தம்.

சயிலமோடியுந் தாழ்சடைடீடியும்
பயிலுமாதவத் தாற்பயனுண்டுகொல்
மயிலுஞ்சேவலும் வாழ்தணிகைப்பரன்
செயலதியாவுமெனத் தெளியார்கட்கே. (கசு)

### தாழிசை விருத்தம்.

கேடிறிருத்தொண் டெனக்களித்தான் கிளத்தென்சொலைத் தேனெனக்களித்தா
னுடுங்குருவாம் படிக்குவந்தா னுலாம்பதவி தரற்கு வந்தான்
நீடுந்தணிகைக் கருமயில னீங்கா தணிகைப் பொருமயிலன்
பாடற்கிசைந்து நடிப்பாரே படர்நோய் வாய் டண் ணடிப்பாரே. (கஎ)

### கலித்துறை ஐயம்.

பாரோ வமருலகோ மலரோ மலையோ வணிக
னூரோ விடந்தெரிந் தோதற்கரிது வெய்யோன் கடவுந்
தேரோடும் வீதித் தணிகையஞ் சாரற் செறிபொழில்வாய்
காரோ குழலயிற் கண்ணோ வெனநிற்கும் காரிகைக்கே. (கஅ)

### குறுங்கழிநெடில்விருத்தம்.

காரிகையா ரெதிர்நோக்க மயிலாடக் கல்லருவி முழவங்காட்டப்
பேரிகைபோன் முகிலார்க்குந் தணிகையாய் நீயிவரப் பெற்றிடாயேற்
றாரிகையா லெழுதருநின் னூர்தியினுங் கடிதுலகைத் துருவியோடிச்
சாரிகையா னெனத்திரியு மெனதுமனப் பரிமாவைத் தடுப்பார்யாரே. (ககூ)

### வெண்பா.

யார்கொ லுலகெல்லா மிமைக்குமுனஞ் சூழ்ந்திட்டான்
யார்கொ லழியாச்சூ ரனவியட்டான்—யார்கொல்
வணக்குறவர் சூழ்தணிகை வாழ்வானவனே
யெனக்குறவு தாய்தந்தை யே. (உ0)

### கலித்துறை.

தந்தனந்தன மென்றிசைபாடச் சலசமுகைத்
தந்தனந்தன மானார்நடஞ்செய் தணிகைவெற்பிற்
றந்தனந்தனமுங் கண்டிலாக் கந்தர்தானெனக்கே
தந்தனந்தனமென்றா னினியொரு தாழ்வில்லையே. (உக)

### அளவடிவிருத்தம்.

இல்லையும்பொருளையு மெமதென்றெண்ணுவீர்
வல்லைவந்திடர்செயு மறலிக்கென்செய்வீர்
செல்லையொன்றிய மதிட்டணிகைச்செல்வனை
யொல்லைவந்தனை செயாவுலகின்மாந்தரே. (உஉ)

### அம்மானை.

மாந்தருடன் விண்ணோர் வணங்குந் தணிகாசலனார்
போந்துதலை யோட்டிலிரப் போன்மகன்கா ணம்மானை
போந்துதலை யோட்டிலிரப் போன்மகனே யாமாகில்
காந்திவிடு மாடசப்பொற் காசுண்டோ வம்மானை
கல்லார வெற்படைந்தால் காசரிதோ வம்மானை. (௨௩)

### நேரடி வெள்ளைவிருத்தம்.

### வெறிவிலக்கு.

மானைத்துடரா வொருவன்கொலைதா
னெனப்பகையம் புலிமேயினிநீர்
கோனைத்தணிகா புரியிற்குலவுந்
தேனைக்கொணரீர் பிணையுந்துயரே. (௨௪)

### வெண்பா.

துயரம்படையாவென் றோகையிடத்தேவண்
டயரம்படையாம லார்வா - யுயரு
மணிகாசலம்புமலை வள்ளிமணவாளா
தணிகாசலத்துறை வேந்தா. (௨௫)

### காலம்.

### கழிநெடில்விருத்தம்.

தாதுவளர் கொன்றையலர் தூற்றுங்காலந்
தமைநினைக்கப் பிறருமலர் தூற்றுங்காலங்
கோதுபட மாமதியு முருக்குங்காலங்
குலவியவின் மாமதியு முருக்குங்காலம்
பாதகவேள் வாங்கியவிற் கணம்பெய்காலம்
பைங்குவளை யாகியவிற் கணம்பெய்காலம்
மாதணிகை யிறையகல மயலாங்காலம்
வண்டணிகை யிறையகல மயலாங்காலம். (௨௬)

### இடையூறுகிளத்தல்.

### கலித்துறை.

காவிலையாம்பணி நாலுமணித்தணி காசலத்தின்
பாவிலையாரிடைப் பாவைநல்லாயல்குற் பார்கடன்மே
லாலிலைபோலுமை குந்தனை காட்டினை யாங்கதற்கு
மேலிலையாங்கை லாயத்திருச்சை விளக்குகவே. (௨௭)

இடைச்சியைப்பழித்தல்.

கலிப்பா.

தானந்தானென்றெவருஞ் சாற்றுதணிகைக்கிரிமேல்
வானந்தானென்னுமிடை வல்லியிடைமெல்லியலே
மோனந்தானாகாதுன் மோர்க்குடம்பின் பாகவிலை
நீநந்தாதேசொ லிளநீர்க்குடமுன்னும்விலையே. (௬௩)

நெடில்விருத்தம்.

விலையிலாமணி மேவுந்திருத்தணி
மலையினான்றனை வஞ்சர்தந்நோயெலாந்
தொலையில்யாந்தொழு வோம்பின்பென்பார்கட
லலையிலாப்பொழு தாடநின்றார்களே. (௬௪)

விருத்தம். இரதவாதம்.

கள்ளூலாம் பூங்குவளை முப்போது முப்போதுங் கயத்துணாரும்
விள்ளுமால் வரைத்தணிகை யிறைக்கடிமைச் சித்தர்யாம் மெய்யாய்க்கேணீ
கொள்ளிபோற் சுடும்பசிக்குக் கூழொருகை வாரப்பா குவலயத்தி
னுள்ளநீள் வரையனைத்து முருக்குகைசேர் கனகமெனவுரைப்போநாமே. (௬௫)

தழைகொடுவினாதலிற் றலைவி கையுறையேற்றமை
பாங்கிதலைமகற்குரைத்தல்.

வெண்பா.

உரைத்தா னுயிரெனவே யொற்றினாள் கண்ணில்
வரைத்தாமெனா முலைமேல் வைத்தா-ளரைத்தூட்டித்
தின்றாளிதன்றிச் செயாததிலைத் தென்றணிகை
மன்னானின் பூந்தழை யெம்மான். (௬௬)

நேரடிவிருத்தம்-ஊசல்.

மானவரும்வானவரும் வணங்கிப் போற்ற
வாமுதவுந் தணிகைவரை வள்ளல்கூறும்
ஞானமறக்கலமிவரா வுயிர்கள் யாவும்
நாடோறுநனிவிரும்பித் தாஞ்செய் கின்ற
வினமுறு மிருவினையாந் திரைகள்வீச
லிவ்வாறுபவக்கடலூ டலைவ ரென்னப்
பானலனை விழிமடவீ ரிபண்டோலும்
பாங்கியர்க ணின்றாட்ட வாடூசல். (௬௭)

கழிக்கரைப்புலம்பல்

மடக்குத்தாழிசைவிருத்தம்

ஊசலஞ்சல மனத்திரியே மிகவுமூசலஞ்சல மனத்திரியே
யொருவிலஞ்செய்கரும்பெண்ணையே மதவொருவிலஞ்செய்கரும்பெண்ணையே
வாசம் வீழ்ந்தமலைத் தென்றலே யிடையின் வாசம் வீழ்ந்த மலைத்தென்றலே
வளைமுன் போகிய திருக்கையே கழலும் வளைமுன் போக்கிய திருக்கையே
பாசமாங் கொடிய நெய்தலே புணரும் பாசமாங்கொடிய நெய்தலே
பார்ப்பிறுண்டரு மிறுரையே யினியென்பார்ப்பிறுண்டரு மிறுரையே
காசரும்பிய வம்புன்னையே பிறர்சொல் காசரும்பிய வம்புன்னையே
கந்தமீறு டிவரத் தணிகையே விரகங் கந்தமீறுடிவரத் தணிகையே. (௯௮)

குறுங்கழிநெடில்விருத்தம்.

தணிகையென் றொருகாலோதிற் சாலோகபதவி யெய்துந்
தணிகையென் றிருகாலோதிற் சாமீப பதவிசாருந்
தணிகையென் றுமைமுக்காற் சாரூப நலனுஞ்செயவேள்
தணிகையென் றுரைக்கினூற்காற் சாயுச்சிய மடைவார்தாமே. (௯௯)

அராவடிவிருத்தம்

தாங்குமயில் வாகனமோ வுமைகுறநங்கை சந்தமோ புனமோ நிலைமை
நீங்குமறை யின்சிரமோ வலவிபடர் சிலைப்புனமோ நிலைநின்று
மோங்கியவா பனகமோ வெண்ணைக்கா வென்றனுமை புரியா தூற்றுய
தேங்குபுனற் சடைமுடியோ னளிந்தசிருத தணிகைவரைத் தேவாதேவே. ()

கலித்துறை.

தேவேந்திரனுதவுந் தெய்வயானை திருக்கணவ
கோவேந்திரவிமுடி சேர்தணிகைக் குமரவொரு
மாவேந்திரமென வல்வினையல்ல வருத்துஞ்
சாவேந்திரவென னின்றிருநாமத்தைச் சாற்றிலமே. (௱௧)

புயவகுப்பு

இலகாரமுத்திரெடு மன்னியொளிர்கின்றன
விசைநீடியெத்திசையு நண்ணிவசைசிந்தின
பலதானவக்கொடியர் வென்னிடமுனிந்தன
பயனுகுநற்புலவர் பன்றுகவியொன்றின

மலர்நீலமுப்பொழுது முன்னுறவணிந்தன
மகமேருவெற்புமுத லெங்கமுமஞ்சின
தலைமேழிரட்டியுறு மன்னவர்பணிந்தன
தணிகாசலக்கடவுள் யன்னிருபுயங்களே. (௪௨)

### மேகத்தோடுகூறல்.

### நெடில்விருத்தம்.

புயலினங்கா ளென்மீது பழியிலையா தலினுமக்குப் புகன்றேன்முன்னர்
வயலினமார் தணிகையைச்சூழ் முல்லையிலீ ரெனக்குமுனை மருவுவீரேற்
றுயருறுமோர் கொடியிடையாற் பலமினும்போ லிருவில்லாற் றலையுமோர்வில்
பயமுறுமோ ரிரண்டம்பா னீர்கொடும்போ மம்பெல்லாம் பறிபோமன்றே. ()

### வேல்விருத்தம்.

அன்றுசூரர்வாதனை தவிர்க்கு மசுரர்குலம் வேரறவடர்க்குங்
குன்றுபொடி யாம்படிதுளைக்கும் குகைபுட்பகங் கிரணைவிடுக்கு
மென்று மடியாருளத்திருக்கு மிரவி சதகோடியிற் சிறக்கு
மன்றல்கமழுந் திருத்தணிகை வரதன் குடங்கைத் தனிவேலே. (௪௪)

### வெண்பா.

வேலேந்துங் கையான் வியன்றணிகை யண்ணலிரு
காலேந்துங் கைகளே கைகளவ — னாலேந்து
நன்றுவே நாவவனை நாடுமனமே மனமென்
றன்றுன் மறைபகரு மால். (௪௫)

### அகவல்.

மாலயன் றொழுதிடு மாலபம்பலவினு
மேவிய சிவனார் வெள்ளிமால் வரையினும்
மந்தமாரு தந்தவழ் கந்தமா தனமுங்
கருப்பாங் குன்றிடு திருப்பரங் குன்றமும்
நந்திலம் படுபணைச் செந்திலம் பதியுந்
தாவினன் குடியுறு மாவினன் குடியும்
மருவே ரகங்கொளுந் திருவே ரகமுங்
குன்றுதோ றாடல்செய் குன்றுதோ றாடலு
மழைமுதிர் சோலைசூழ் பழமுதிர் சோலையு
மணிகையார்ந் தருவிதாழ் தணிகைமால் வரையு

மற்றுள வரையினும் வாழ்தரு முருக
வீறு மதிநிக ராறு முகவ
மூறிதழ்க் கமல நேரா றிருவிழிப்
பன்னிரு வரைநிகர் பன்னிரு புயவ
கன்னியரிருவர் கலந்தணை மார்ப
வறுசமை யத்தரு முறுசமை யத்த
தேவ தேவநின் றிருவடி பணிகுவன்
குழற்சை வலமுங் குலவுகட்கு வளையும்
திருமுகக் கமலமுஞ் செவ்வாய்க குமுதமுங்
துணைச்செவி வள்ளையுந் துவரிதழ்ப் பவளமுங்
கந்தரச் சங்கமுங கவின்றபன் முத்தமு
மூந்தியஞ் சுழியு மொளிர்தன வெற்பு
மருகிடைக் கொடியு மல்குற்பை நாகமு
முழந்தா ளலவனு முன்கால் வராலும
பஞ்சடி யாமையும பரந்திடு மாத
ரழகெனு மினியமெய் யாயகட லழுந்தி
யிருவினைத் திரைகள் பொருதழித் தலைப்ப
விரகக் கொடுவெளி யரிதெழுந் தெறியக
காமன் விடுங்கணைக் கராவு மங் காப்பத்
திகைத்திடு வேனைநின் செங்கையாற் பற்றி
யெடுத்தருட் புணைசேர்த் திகலற நடாத்தி
யக்கடற்கே செலு மாற்றொடு புணரிய
விக்கரைமருவா தென்னைநா தாந்தமெ
னக்கரை மேல்விடுத் தாளுஅ
மெய்க்ககமலக கழல் வீடுதந் தருளே (௬௬)

கலித்துறை.

அருளார்கலி யளித்தெனனை யின்றோ கருப்பாசயத்தி
னிருளார்கலி தவிர்த்தாளுந் தணிகை யிறைவர்தந்தே
ருருளார்கலித் தருவரும் வந்தார்தந்த வும்பனமிசைப்
பொருளார் கல்யாணமுஞ் செய்வதுண்டாகமர் பூங்கொடியே. (௬௭)

அளவடி விருத்தம்.

செடிக்குரம்பையி லுற்றுளுங் குயிற்குரல் கொடிகளுண்டாமோ
மிடிக்குடம்பான வென்னுண் மேவினுநினையான் காணேன்
கடிக்குடங் கைசேர்நெல்லிக் கனியின்றா னத்தைவேணி
முடிக்குட முனிவன்காதின் மொழிதிருத் தணிகைவேந்தே. (௬௮)

## நெடில்விருத்தம்.

வேந்தராக்கும் வறிஞோரை விண்ணோராக்கு மண்ணோரை
சாந்தராக்குஞ் சினத்தோரைத் தவத்தோராக்கு மவத்தோரை
காந்தமீர்க்கு மிரும்பெனவென் கருத்தையடியா ரடிக்கூட்டுஞ்
சேர்ந்தவாழ்க்கைத் திருத்தணிகைத் தேவனணியுந் திருப்பூச்சே. (சகூ)

## தாழிசைவிருத்தம்.

பூசலையுமறுய் சங்கணியற்றாய் பொறியற்றாய்
வாசமுமற்று யன்னமுமற்று மனைமொட்டே
யாசிலெழுத்தாறார் தணிகைப்பாலமர் வேட்டுப்
பாசறையுற்று ராசையுனக்கோ பகராயே. (ருo)

## சந்தக்குறள்விருத்தம்.

பகலோ டிரவற்ற விடந்தனைப் பாவியேன்கண்
டிசலார மலமற்றிருக்கும் வகையென்று சொல்லா
சகமூரு மென்னெஞ்சப் பரியொடு தாவினமஞ்ஞை
ககமூர் தணிகைக் குறமாதினைக் கள்ளியானே. (ருக)

## கழிநெடில்விருத்தம்

கள்ளியின் மலரான சின்னிமே லெனிவா
காஞ்சிரங் கனியையான நுகர்வார
கருப்பெனத் தழைபேய்க் கரும்பையான கறிப்பார்
கருங்கட லுவரையார் குடிப்பா
ருள்ளினை சுவைபோல் வெள்ளிபொன் மலைய
யோங்குறத் தாங்கிவாழ்ந் திடினு
முற்றவர்க் குதவா வுலோபர்தந் திருவை
யுலகிடத் தெவர்விரும் பிடுவார்
கொள்ளியின் மலரு மள்ளிதழ்க் காந்தட்
குலங்களை யருக்கனு மதியுங்
கோளரா வினமென் றஞ்சிநா டோறுங்
குலவுமை யருகிலே நடக்கும்
தெள்ளியதணிகைப் பதியினி லடைந்தோர்
தேடியே காசெலா மோடியிற்
றெட்டியே பறித்தோர் பட்டிமண் டபத்திற்
சேர்த்திடுஞ் செட்டியா னவனே. (ருஉ)

னெற்றியிடுந் திருநாமமு நீலிநெடுஞ் சூலங்
கொற்றியெனுந் திருநாமமு நீலிகொளும்பேரே. (௫௭)

பிச்சியார்.

சிந்தடிவிருத்தம்.

பேர்பெருந் தணிகைப் பொருப் பிச்சியார்
பெண்களேச நடந்திடும் பிச்சியா
ரேர்கொள்வீ டெங்குமேற் பர்பதத்தையே
யிசையுங் கஞ்ச மிவர்தம் பதத்தையே
வார்தருங் குழலா மஞ்சுவர்க்கயே
வந்தணைந்தவர்க்கா மஞ்சு வர்க்கயே
சீர்கொள்பூதி மெய்யென்றுந் தரிப்பரே
செப்பும் வேடங்கள் மற்றுந் தரிப்பரே. (௫௮)

கழிநெடில்விருத்தம்.

தரித்தசக்கரத்தையேவ தனதுமார்ம தாணியாய்ப்
பொருத்திமாய னோடவன்று பொருதுதாருகன்றலை
யரைக்கணத்திறற்றுவீழ வங்கைவே லெறிந்தவன்
திருத்தணிப் பொருப்பினின்ற தேவனெங்கடேவனே. (௫௯)

சிந்தடிவிருத்தம்.

தேவராலுந் திருத்தணி கேசனைப்
பூவராலடி போற்றிப் பணிகலாப்
பாவராலைப் படுகரும் பென்னவே
யாவர்மாதூர்த மல்குற் புழைக்கணே. (௬0)

எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

புழைக்கை யானையோர் பார்வையாக்கிமுன்
போதவே விடுத் தாதரத்துடன்
றழைத்தகான் மனும்வல்லி யங்குசத்
தானமா விரண்டணையக் கண்டுவெந்
திழைத்த மாதவத் தெய்வயானைசே
ரெழிற்புயங்களாந் தறியிற்பூட்டினான்
மழைக்கணங்களார் தணிகை வேடனுண்
மைத்திறத்தையார் புகல வல்லரே. (௬௧)

கழிநெடில்விருத்தம்.

வல்லவரு மொருமாவி லரைமாவின் மேலிருகால் வைத்தான் மற்றுஞ்
சொல்லுமரை மாவையமர் முந்திரிகை மேல்வைத்தான் றோகையென்றும்
வெல்லுறுங்குக் குடமென்று மாங்கதற்குப் பெயர்புனைந்தான் விரும்பிவாழு
மில்லமென தகமுமறை முடியுமெழிற் றணிகையுமா யிடங்கொண்டானே. ()

வண்டோச்சிமருங்கணைதல்.

கலித்துறை.

கொண்டலுலாவுந் தணிகாசலன்பதங் கூறலர்போல்
வண்டர்களேயொரு காரிகையோதி மயங்குகின்றீர்
துண்டமதா மெல்லினவல்லினந் தலைச்சொல்லுவதென்
கண்டமதாகு மிடையினநீர்தலைக் கண்ணுறினே. (௯௩)

சந்தவிருத்தம்.

கண்ணிலார்களறுவரோர் கயத்தைநாடுமாறுபோ
லெண்ணிலாறுசமயர்தாமு மென்னொணின்னை யுணர்வதே
வெண்ணிலா முடித்தவேணி விமலஞாளித்திடும்
பண்ணுலாவு தணிகையம் பதிக்குள்வாழு முருகனே. (௯௪)

நெடில்விருத்தம்.

முருகனென்று நினைப்புனத்தில் முதிர்கூன்கிழவ னாகினையே
மொழியுமநாதி சைவனென்று முன்னோர்கொக்கை முடித்தனையே
பரமன்மைந்த னென்றுகடற் பள்ளிமருக னாகினையே
பரையின்முலைப்பா லுண்டுமின்னும் பன்மீன்முலைப்பா லுண்டனையே
குருவென்றிருந்தும் வானவர்தங் குருவின்மொழியன் றுகந்தனையே
குலமாந்தெய்வ யானையன்றிக் குறமாதினையு மணந்தனையே
தருவதன்றி யேற்றறியா தவனீகழுநீ ரேற்றனையே
தக்கதோவிங் குணக்கிவைசொற் றணிகாசலத்தி லறுமுகனே. (௯௫)

தாழிசைவிருத்தம்.

அறுமுகந்தனி லொருமுகந்தனை யடியனேற்குற வாக்கிடீ
ரம்பகம்பனி ரண்டிலொன்றிலென் னுணவங்கிட நோக்கிடீர்
வெறிகொள்பன்னிரு கையிலொன்றிலென் வெம்பவக்கடல் தடுத்திடீர்
விளங்குமாறுசெவ் வாயிலொன்றினில் வீடுசேர்மொழி கொடுத்திடீர்

செறியுமாதிரு செவியிலொன்றிலென் செய்தியாவையுங் கேட்டிடீர்
செய்யமார்பமோ ராறிலொன்றிலென் செந்தமிழ்த்தொடை பூட்டிடீர்
தறுகண்வேடர்க ளுதவுமின்கொடி தனைமுமன்பர்கள் மனமுநீள்
தணிகையங்கிரி முடியுநண்பு தழைத்தசெங்கல்வ ராயரே. (௬௬)

தலைவன் கற்சுரத்தெளிமை செப்பல்.

கலித்துறை.

செங்கற்சுடிகை யராவிருபாலுந் திருவிளக்காய்
சங்குற் பொழுதிந்தக் கற்சுரநீந்தினன் கன்னியிடைச்
சிங்கத்தைச் சாய்க்குமுலை யானைகடுணை செய்திடமா
தங்கத்தைச்சாய்க் குமரிவாழ் தணிகையஞ் சாரலினே. (௬௭)

வெண்பா.

சார்ந்தாரைச் செல்வந் தனைவா தருளுமன்பு
தீர்ந்தாரை நல்குரவிற் சேர்விக்குஞ்—சேர்ந்தாரைத்
தாழ்வெய்த வொட்டாத் தணிகாசலத்தி லென்றும்
வாழ்தெய்வ சிகா மணி. (௬௮)

குறள்விருத்தம்.

மணிகாசலனுந் தணிகாசலம்வாழ்
வணிகாசலமோ தணிகாசலமே (௬௯)

வண்ண விருத்தம்.

காசலனுந் தணிகேசர் திருப்புகழ் கட்டுரை செய்திடுவோன்
வாசவன் முற்பிற தேவர்கடாளுறும் வல்லிபொடித்ததலா
னீசவரக்க ரொனுக்கருங் கானக நீறுகலந்ததுநாம்
பேசினவிப்பொழு தேழ்பிறவிக்கடல் போரறவற்றிடுமே. (௭௦)

வெண்பா.

வற்றாச்சுனையில் மலராதசைபைங்குழுநீர்
குற்றாதணியுங் குமரேசா—கற்றோர்கள்
போற்றுந்தணிகைப் பொருப்பா வென்றீ வினைகள்
மாற்றும் வகைபோதா வாய். (௭௧)

## சிந்துவிருத்தம்.

வாயுண்புகழே துதித்திடவு மனதுன்னடியே நினைத்திடவும்
தாயநின்றாள் கரந்தொழவுச் சிரந்தாள் கோயில்வலம்வரவு
நீயிங்கிவையே யெனக்கருள்வாய் நிலையபொன்மாயா வேண்டியலன்யான்
காயுங்கதிர்கான் மணியருவி கறங்குந்தணிகைப் பெருமானே. (எஉ)

## விருத்தம்

பெரியகுன்ற மட்டுநெஞ்சென் கரியகுன்ற மட்டிலாய்ப்
பிறழும்வேல் பிடித்துமென்றனைப் பிறவிவேலை நீக்கிடாய
வரியும்வே தனைத்தடுத்து மாரன்வேதனைத் தடாய
வணிகனென்றிருந்து மென்றனுள் மருவுகாசை மாற்றிலாய்
அரியுமஞ்ச வரனுமஞ்ச வயனுமஞ்ச வும்பரோ
டண்டர்கோனு மஞ்சவண்ட மாயிரத்தோ டெட்டினும்
திரியும்வஞ்சவாணனைச் செலுத்துசூர னஞ்சமுன்
சிறிதுகண்களை கடையில்வந்த தென்றணிகைக் குமரனே (எங)

## கழிநெடில்விருத்தம்.

குமராதிருமான் மருகாமுருகா கொடியோரைச
சமராடியமா மயிலாவயிலா தணிகேசா
அமராபதிகா வலவா தொலைவா மலமென்றே
நமர்காணுரையீர் நலமார்கதிநாம் பெறலாமே. (எச)

## நெடில்விருத்தம்.

பெற்றாலுமினி யொருவ ரனைத்தணிகைவரையகத்தே பெறவும்வேண்டு
முற்றாலுமருந்தவங்க ளவ்வரைக்கேயுறல்வேண்டு முயர்ந்தகல்வி
கற்றாலுமதுதிருப் புகழுமுதோனாடோறுங் கற்கவேண்டுஞ்
செத்தாலுமிவ்வுடல மத்தலமீ துறவேண்டுஞ் சேந்தனே. (எரு)

## வெண்பா.

சேந்தவிராலுகிராற் செவ்வழியாழ் வாசித்துப்
பாந்திச்சைகள்பேசும் பொய்ப்பாறை—நாந்தரைமேன்
மட்கலமொப்பாயினும் வன்றணிகை யூரற்குப்
பொற்கல மொப்பார்க்கே புகல். (எசு)

### கலித்துறை.

புகலாயிரவும் பகலுந்தணிகைப் பொருப்பிலெழும்
பகலாயிரமன்ன சேயோன் புகழையிப்பாழ் வயிற்றுக்
இகலாயிரந்திரந் தெய்ப்பது நீங்கிலை யென்றுநல்லோர்
நகலாயிரங்கவு நாணமுறு மெய்துநாளு நெஞ்சே. (எஎ)

### விருத்தம்.

நானேபிரம மென்பாரு நானேபிரம மென்பாருங்
கோனேபிரம மென்பாருங் குணமேபிரம மென்பாருந்
தானேயூழைப் பிரமமெனச் சாற்றுவோருந் தணிகைவரை
வேளேபிரம மென்னுமல் வீணேபிறப்பி லுழல்வாரே. (எஅ)

### தாழிசைவிருத்தம்.

உழுலுமொரு கொச்சைகையட் டோர்கொக்கடியி லிருந்தா
ரொருபயிலை யிவர்ந்துதன்றிச் சேவலைநகைப் பிடித்தார்
அழகியசெம் படன்மகளு யாலைவாய் நின்று
ராரல்ன்பா லாசைகொண்டோர் பொய்யைபிடத் திருந்தார்
குழவியெனப் பொலிந்து குறிஞ்சிக் கிழவனுனோர்
கொடுவேங்கை யாகியொரு குமாரியைப் புணர்ந்தார்
தழையுடுக்கும வேடரொடு மலைகளொறுஞ் சரித்தார்
சாற்றில்வலைச யாந்தணிகைச் சண்முகர் தஞ்செயலே. (எகூ)

### வெண்பா.

தஞ்செயலே யாவுமெனச் சாற்றித் தணிகையிறை
நஞ்செயலைப் போக்கி நலமளித்தான்—நெஞ்சமே
என்னே யுலகத்தில் யானெனதென் றேயின்று
மன்னே கிடந்தழிகு வாய். (அ0)

### விருத்தம்

ஆயவெண்ணுளமாங் கோயிலினமருவு மருட்டணி காசலவமரா
நாயகசிரமோ ராறுடையார்க்கு ஈற்சிரமைந்திறோ னுயரில்
தூயவன்னவனில் நாற்சிரமுடைய சுருதிவாணவனுயர் குவனுல்
மாயையாருலகத் தோர்சிரத்தவரு மற்றவர்க்குயர்ச்சி யாகுவரே. (அக)

### சந்தவிருத்தம்.

ஆகுவாகனனே டொருமாங்கனிக் கன்றம ராடியநா
ளேகநாயக னிவ்வுலகைச்சுழன் றிக்கணமுன் வருவோர்க்
கீகுவேன்கனி யென்னலுமே மயிலேறி யிமைப்பொழுதில்
வேகமாய்வரு கினகழறக்தருள் மெய்த்தணிகா சலனே. (அஉ)

### முடுகுவிருத்தம்.

காசிகாஞ்சிமுத லாந்தலங்களமிகு காதல்கொண்டு நடமேசெயு
மீசனார்கயிலை வாசனார்நகைசெ யெழில்கொண்முப்புர மழிந்ததால்
தேசுலாந்தணிகை வாசனார் முருகர் செய்யவாயிலிள முறுவலான்
மாசுலாவியிடு மெனது முப்புரமும் வலியழிந்திலையின் மாயுமே. (௮௩)

### சந்தவிருத்தம்.

மேகஞ்சூழ் தணிகாசலர் வீதிமேவுமதங்கிதன்
பாகினுங்கிய செஞ்சொலாய் பண்மறந்தனர் விஞ்சைய
ராகுமாடவிருளட மார்பை தப்பினள்சக்கர
வாகமாமுலையாற்றுவ வைத்துறந்தனர் முனிவரே. (௮௪)

### தாழிசைவிருத்தம்.

முனிவோர்தொழூஉந் தணிகாசலர் முன்பேகுது மென்றே
மொழிந்தே யெழுந்தனைங்கதன் முன்பேவினை மலைதா
னினியேதா ணயில்கொண்டிடு மென்றேயழிந்ததுவா
லிவ்வாறு பிறப்பாங்கட லெழுங் கழிந்ததுபின்
னுனிமூல மலச்சூர்மா மேயங்குகலந்தா யுடனே
யொடிந்தேவிழுந் தருமற்றதற் கொருநற்றுணை யாகுந்
தனிமாயையின் வலிசிந்தின நமர்கா ளவனைகரிற்
றங்காதுவி னடைவார்செயல் சாற்றற் கெளிதாமே. (௮௫)

### துபள்விருத்தம்.

தாமரங்க டவிர்ந்துநின்-றுமமென்றுநவின்றிடற்
கோமெனும்பொருளோதிடா-யெழுந்தணிகேசனே (௮௬)

### வெண்பா.

நேற்றிருந்தாரின்றைக்கு நீறானாரென்னுமனம்
பார்த்துமுடன் மீதாசைப்பட்டாயே-நார்த்தநெஞ்சே
யென்றுந்தணிகேச னிருகழற்கன் பாகுவையோ
நின்றெனக்குச் சற்றுரைசெய் நீ. (௮௭)

### அளவடிவிருத்தம்.

நீயுமொருவின்மகளை மணம்புரிந்த செயலறிந்தே னின்பிதாமுன்
போயொருவின் மகளைமணம் புரிந்ததனலன்றிப் பொருப்பரீன்ற
நாயகியாம் வல்லிதனை மணந்தனைநீ யவனுமொருநகமதாமென்
றுமையைமணம்புரிதலினாற் றந்தையைப்போ லுனக்குமிரு தாரம்வாய்த்த
தாயராறுமீன்முலையுண் டொருகுளத்தில் வளர்தணிகை யமரரேறே. (௮௮)

## எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

எறுகிமாத ரெழில்கண்டு கூடு மிடமெங்கு நாடியுழலா
வேறுகி யுன்ற னடியாரினத்தை விழையேனை யாள்வதிலையோ
மாறுகிமந்தி மரமேறியந்தி மதிவாங்கி யோங்குபலவின்
றூறூர்பழங்கள் சுளைகின் றருந்து தணிகாசலத்தி னிறையே. (௮௯)

## கலித்துறை.

கடக்குஞ்சரங்க ரென்மனதண்டங் கடந்திமைப்பி
னடக்குஞ்சரமென ரிலரிறுக்கயு நானறியே
னடர்குஞ்சரச மனமுதலையாய் புகழ்பட்டிசகு
நடக்குஞ்சரவண மன்றுதணிகை நகர்முட்டினனே. (௯௰)

## நெடில்விருத்தம்.

நாடருநீள மலைசுனைப் பிரைர்து நுகர்ந்திடுவோம்
நன்றெழு வாரியுகு காசப்பெய்து குடித்திடுவோம்
நீடுமெழுவகை மேலாகங்களைத் துகளிநிறுப்போம்
நிலத்தையுமோ ரடியாக்கி விலாக்கலையைத் தரிப்போம்
பாடுறு வேதனைக் கமலக்கண்ண னூர்கிடுவோம்
பண்ணரியைப் பரியாகப் படைப்போமிவ வுலகில்
தேடருஞ்சீர்த் தணிகைவரைச் செவ்வே டன்னருளால்
சிவனைநொடித் தான்மலையிற் றெளிவிப்போ நாமே. (௯௧)

## கழிநெடில்விருத்தம்.

தெளியாப்புனலைத் தேற்றுவித்தாற் றெளியவுரைக்கு மாறதுபோல்
விளியாதெனைச்சூ ழாணவத்தை விளியச்சடைகண் டிதளித்தான்
வளியாருலவு முன்றிலுந்தன் மகிமைமுகிழ்ப்பவைகுறுறு
நளியார்குவளை மூன்றலரு நகத்தானறணிகை யகத்தானே. (௯௨)

## அறவடிவிருத்தம்.

அகமலரா விழியிரண்டு மருவிசொரி தரமனது
முகமலரோ மூவிரண்டு மொழிந்துருகப் படியருளாய்
நகமலருஞ் சயிலைதனை நற்கோற் சன்றளித்துச்
சகமலரும் புகழ்படைத்த தணிகைவரைக் குருபரனே. (௯௩)

## நெடில்விருத்தம்.

குருபரனீ தாருகனை யடுதலினூர் சங்கரங்கைக் கொண்டான் மாயன்
வாமுறுமோர் வெண்கரியை யளித்ததனாற் பெண்கரியை வலாரி யீந்தான்
பிரமனைமுன் சிறைசெயலாற் பரமனுந்தாழ்ந் துபதேசம் பெற்றா னின்போ
லொருவருமே ரிலைநினைக்குத் திரிகூட மாந்தணிகை யோங்க லானே. (௯௪)

### கலித்துறை.

ஓங்காரத்திற் பிறர்திங்கைநாளு முரைத் தெனது
ரீங்காயிரபூங் காங்கேனை யாண்டனன் றென்றணிகை
நீங்காதவேலை னிஃதறிந் தென்றனை நீடுலகிற்
பாங்கார் குறத்தித் திருடலைன்றேசும் பயனறிந்தே. (கூரு)

### சிந்தடிவிருத்தம்.

பயன்பெறு மூவுலகினிலா வழகுற்றாலும்
பாமனுதற் கட்டீயா லுருவமாறாய்
நயந்திடுசாபங் கருப்புப் பூவம்பேந்தி
நாண்மிருத்த வண்டார்குண மடுத்துநின்றாய்
யுயர்ந்துபிடித் திடுந்துவச மீனயாகி
யுறுபடைபெண் கூட்டமதா மதனனேகாண்
வியந்ததிருத் தணிகைவரைச் செவ்வேலைப்போல்
மேலாகாய் வேளெனும்பேர் படைத்துமாதோ. (கூசு)

### வெண்பா.

மாதரையு மாதரையு மாதரையும் வேண்டிநறும்போ
லாதரையும் பாடு மவப்புலவீர் — பூதரையாள்
சேயாந் தணிகைவரைச் செவ்வேளைப் பாடிலென்று
மாயாத செல்வமருள் வான். (கூஎ)

### கலித்துறை.

வானமளந்தது மாயோன்றிருவடி மாயனுந்திக்
தானமளந்தது நான்முகன்சேவடித் தாழ்புவிபோ
மேனமளந்தது வெள்ளிவெற்பேனடி யேனலவளர்
கானமளந்தது தென்றணிகாசலன் காலடியே. (கூஅ)

### மருட்பா.

அடிவண்டறை பயிலுமங்கணி மைக்குப்பூ
முடிவண்டறை குழலின் மொய்க்கும் வடிவழிழல்
காட்டுமாத விற்றணிகை
நாட்டில் வாழ்தரு நங்கைமற்றிவளே. (கூகூ)

### நெடில்விருத்தம்.

ஏறும்புகழ்சேர் தென்றணிகைக் கோனிருதாளுங்
கூறும்பெரியோர் சேவடிநெஞ்சு குறித்திட்டோர்
வீறுங்கமலைத் தந்தணனறியா வீடெய்தி
நீறும்படிதீ வினையினகன்றிடு நீராரே. (க00)

## தணிகை கலம்பகம்-முற்றிற்று.



கணபதி துணை.

---

## திருத்தணிகைச் சந்நிதிமுறை.

ஏழாவது

# தணிகைமயில்பத்து.

---

வட்டக்கலாப மயிலே வந்தென் பழவினை தீர்த்
வெட்டவெளியிலென்னை யிருத்தச் சுபமா யிருவெனவே றொன்
றுட்டக்கிரவுஞ்ச வெற்பைச் சூரனைவே ரறபா[illegible]தோன்
சட்டப்புழுகணி மெய்யன றணிகேசனை நீகொண்டுவாராய். (க)

நஞ்சுட்பொதியு மரவை யடங்கப்புடைக்கு மயிலே
கஞ்சக்கிழவன் [illegible] திற் சிறையிட் [illegible] ருட்டுமையன
பஞ்சிற்படு நெருப்பெனப் பாவங்களைத் தவிர் தாண்டோன்
றஞ்சத் தணிகையில்வாழுஞ் சதுரனைநீ கொண்டுவாராய். (உ)

நீலக்கலாப மயிலே நினைப்பவ ருள்ளத்தில் வாழுங்
கோலக்குறத்தி மணாளன் குமரனமராகணாதன்
சீலச்சிலப்பணிபாதன் சேவற்கொடிவலங் கொண்டோன்
வேலுக்கிறைவன றணிகை விசாகனைமேற் கொண்டுவாராய். (௩)

வன்னக் கலாபமயிலே மாயமலப் பிணிநீக்கித்
தன்னையளித் தென்னையாளுஞ் சற்குருவா முருகோனை
முன்னைப் பழமறைகாணு முதல்வனை விண்ணவர்கோனைக்
கொன்னைத்தணி கைமயின்மேவுங் குமரனைநீ கொண்டுவாராய். (௪)

குன்றிற் சிறை விரித்தாடிக் குலாவுங் கலாபமயிலே
மன்றிற்சிறந் தினிதாடும் வரதனளித்தருள் செல்வன்
மன்றற்குறத்திக் கிசைந்த மணாளன்றணிகையில் வாழும்
வென்றித்தனியிலைவேல் விமலனைநீ கொண்டுவாராய். (௫)

தேரிற்பொலியுங் கலாபச் சிறைவிரித் தாடுமயிலே
பாரிற்றடுத் தென்னையாண்டு பங்கயச்சேவடிகாட்டுங்
கூரிற் பொலிந்திடுஞ் செவ்வேற் கொற்றவ னற்றணிகேசன்
னூரிற் பொலிந்துகடப்பந் தாரவனைக் கொண்டுவாராய். (௬)

அண்டச் சுவரினுக்கப்பா லரைக்கணத் தோடி யுலாவுஞ்
சண்டக்கலாப மயிலே தாயிற்சிறந் தெனையாண்டோன்
றெண்டருக் காமுதன்ன சுந்தரன் ஞானவி நோதன்
கொண்டற்றணிகையில் வாழுங் குருபரனைக்கொண்டுவாராய். (௭)

தூவியந்தோகைமயிலே சொல்லுவன் யானொன்று கேண்மோ
பாவியருள் ளொளின்மிக்கோர் பாரிடை யாவருமில்லை
கூவிவலியவந்தாளுங் கொள்கை யெம்மானென்று கேட்போம்
காவியந்தண் கிரிமேய காங்கேயனைக் கொண்டுவாராய். (௮)

மேகத்தைக்கண்டு சிறகை விரித்து நடிக்குமயிலே
சோகப்பிறப்பை யறுப்பான் றுதிக்குப்பணியுமெனக்குத்
தேகத்தைப்பொய் யெனக்காட்டிச் சிதம்பர மாக்கிவைத்தோனைப்
போகத்தணிகை யில்வாழும் புனிதனைக்கொண் டோடிவாராய். (௯)

வண்ணப்பிணி முகமென்பேன் மஞ்ஞையென்பேன் மயிலென்பேன்
கண்ணிற் பொலிந்தசிகண்டி கலாபிம யூரமென்பேன்
பண்ணிற் சிறந்தருமலி பசுந்தோகை யென்றும்பணிவேன்
அண்ணற்றணிகையில் வாழும் அறுமுகனைக் கொண்டுவாராய். (௧0)

தணிகை மயில்பத்து-முற்றிற்று.



கணபதி துணை.

## திருத்தணிகைச் சந்நிதிமுறை.

எட்டாவது

# தணிகை சேவற்பத்து.

செஞ்சூட்டுந் திருச்சிறையும் பொற்பதமு முருடைச் சேவலே நீ
பஞ்சூட்டுந் தழலெனவென் பவந்தொலைத்துப் பாகநிதந் தாளவின்று
மஞ்சூட்டு மழைதவழு மதிற்றணிகை வரைவாழு மன்னன்றனைக்
குஞ்சூட்டும் பெடைமணந்த மயிலேறிய பெருமானைக் கூவுவாயே. (க)

என்றுமுனக் கடிமையென முறியெழுதித் தருகுவனீ தியம்பக்கேண்மோ
துன்றுசிறைச் சேவலெனுங் குக்குடமே யெழுபிறவி தொறுநீங்கானை
மன்றினடித் திடுமொருவன் மகனாகி யுபதேசம் வழங்கினானைக்
குன்றிலுயர் தணிகைவரைக் கோமானை வரவொருக்காற் கூவுவாயே. (உ)

புறத்திருளை யகற்றுதற்குப் புணரியெழுஞ் சூரியனைப் புலரிக்காலைச்
சிறக்குமிரு சிறையடித்துத் திணர்ந்தினமு மழைத்துலவுஞ் சேவலேநான்
றுறப்பரிய வகத்திருளைத் தொலைப்பதற்கு நீயொருகா ற் சுடர்வேலானைக்
குறத்தியணை ணிகை வருஞானசூரியனைக் கூவுவாயே. (௩)

அண்டமெலாங் கலாடைமென விருசிறையி னுள்ளடக்கி யபயங்காத்துத்
இண்டிறல்சேர்த் தணர்குலஞ் சிதையவிடிக் குரல்காட்டுஞ் சேவலேகேள்
பண்டையவா பழம்றுத்து நலமுறுத்தி யெனையாண்ட பாலனீலக்
கொண்டலூர் தணிகைக் குருநாத னிங்குவரக் கூவுவாயே. (௪)

யாமங்க டோறுந்துயிலு மனிதர்காள் வாணாள்வீ ணாயிற்றென்று
சேமங்கொள் சிறையடித்துக் கூகூ கூவென்னுஞ் சேவலேகேள்
காமங்கை மிக்கொருநான் விடியளவும் விழிதுயிலாக் கணக்கிதென்றே
கோமங்கை வள்ளிபுணர் தணிகையா னிங்குவரக் கூவுவாயே. (௫)

திக்கரிக்குந் தானவரைச் செயங்கொளுஞ் சேவற்கொடியே திருமால்போற்று
நக்கருக்கு முமையாட்கு மொருமகனாய் வருமிளைய நாதன்றன்னை
யக்கரிக்கு மிக்கரிக்கு மருமகனை வள்ளிதெய்வ யானைகோனை
கொக்கரிக்குங் கொக்கரிக்குந் தணிகைவரை வேலோனைக் கூவுவாயே. (௬)

சோதிடங்கள்பொய்ப்பினுநின் றாமொழிபொய்யாதெனவே சொல்வர்நல்லோர்
நீதறவோர் காலிருகான் முக்காலுங் காலையாமந் தெரியச்சொல்வாய்
ஆதலினா லுனக்குரைப்பே னண்டலைச்சே வற்கொடியே யறுமீனுக்குங்
கோதையர்பா லுறுந்தணிகைக் கோமானை யிங்குவரக் கூவுவாயே. (௭)

துண்டத்தா லுரங்கிழித்துத் தானவர்செங் குடலினைமேற் சூடலேபோற்
கண்டத்தா ருன்குலவுஞ் செஞ்சூட்டுச் சேவலொன்று கரைவல்கேண்மோ
அண்டத்தார் வையகத்தா ரரவுறையும் பாதலத்தா ரகலாதேத்துங்
கொண்டற்றா ரகைகுலவுந் தணிகையிளை யோன்வரநீ கூவுவாயே. (௮)

தாரகைநெல் லாக்கொறித்துச் சமுத்திரநீ ரறக்குடித்துச் சமரில்வந்து
சேரவுணர் படவிடிநேர் குரல்காட்டுஞ் சேவலொன்று செப்பக்கேண்மோ
கீரனுரை யுடனருணை கிரிநாதன் றுதியின்மிகு கேண்மையானைக்
கூரயில்வேற் காத்தானைத் தணிகைவரை யானைவரக் கூவுவாயே. (௯)

வந்திப்பேனனுதினமும் வாழ்த்திடுவே னுனதுதிரு வடிவைநாளுஞ்
சிந்திப்பேன் முப்பொழுதுஞ் சேவிப்பேன் செஞ்சூட்டுச் சேவலேகேள்
பந்திப்பே னெனதுவலி பாவென்னு மாணவமாம் பகைவிண்டோடக்
கொந்திற்றேன் பொழிசாரற் றணிகைவரை யான்வரநீ கூவுவாயே. (௧௦)

தணிகை சேவல்பத்து-முற்றிற்று.



உ

கணபதி துணை



## திருத்தணிகைச் சந்நிதிமுறை.

ஒ ன் ப தா வ து

# தணிகை வேல்பத்து.



போராவினையின் றிரைவெறியும் பிறவிக்கடல்வற் றிடச்சுவற்றி
யாராமாயைத் திரைபுணரா வழுதக்கடலின் முழுகியிடாய்
போராரவுணக்கடலை நீறாப் புணரிமேயழுக் கறவுறிஞ்சி
யாரார்தணிகைப்பெருமான்கை யிருந்தஞானச்சுடர்வேலே. (க)

நீங்காமாயைப்பொருள்பலவு நெருங்குறும்பிறவிக்கிரிசாடி
யோங்காரத்துள்ளொளிக்கிரிமே லுயர்ஞானத்தின்முடியிருந்தாய்
வாங்காமாயம்பலபுரிந்த வஞ்சக்கிரவுஞ்சந்துளைத்துப்
பாங்கார்தணிகைப்பெருமான்கைப் பயிலுஞானச்சுடர்வேலே. (உ)

மூலமலவேர்மேல்போக்கி முளைத்தபவமாமரந்துளைத்துச
சீலமலமரக்கோட்டிற் செறியுஞானத்தேனருந்தாய்
சோலமருவும்புறக்கடலிற் குலவுஞ்சூர்மாமரந்தடிந்து
நீலவரையினிலையோன்கை நின்றஞானச்சுடர்வேலே. (ங)

கானப்பிறவிவேர்முழுதுங் களைந்துன்னருளேர்கொண்டுழுது
ஞானக்கரும்பைமனப்புலத்தி னாட்டிவிளையும்படிபாராய்
வானத்திறையைக்குடியேற்றி வானோர்சிறையெலாந்தவிர்த்து
மோனத்தணிகைப்பெருமான்கை முகிழுஞானச்சுடர்வேலே (ச)

காமவெகுளிமயக்கமெனுங் கடியோர்வாழுமுப்புரத்தி
னாமருவுக்கிரியையற நாயேன்பிறவிநோய்தவிர்ப்பாய்
தீமையாக்கர்சூலவராம் சேரும்புரங்கடமையழித்துப்
பூமன்றணிகைப்பெருமான்கைப் பொலியுஞானச்சுடர்வேலே (ரு)

மலவேதனையுமடித்துடல மருவாவழியுங்காட்டிப்பின்
னலவேதத்தின்சிரப்பொருளை நாயேற்கருளுநாளுளதோ
வலர்வேதனையும்புடைத்துலக மாக்குந்தொழிலுங்கைக்கொண்டு
பொலமார்தணிகையமர்ந்தான்கைப் பொலியுஞானச்சுடர்வேலே. (௬)

சூழுநாரம்புசெந்தசைதோல் சுக்கிலமூளையெலும்புதிர
மாழுமெய்யைப்பொய்யெனக்கா ணகண்டஞானந்தனையளிப்பாய்
தாழுமலையும்பிளந்தவற்றிற் றங்குமசுரனுரம்பிளந்து
வாழுந்தணிகைப்பெருமான்கை மருவுஞானச்சுடர்வேலே. (௭)

அஞ்ஞானத்தின்வசமாகி யழியும்பிறவிதனையகன்று
மெய்ஞ்ஞானத்தின்மயமாகும் வீட்டிற்குலவுநாளுளதோ
பொய்ஞ்ஞானத்தின்வயத்திருள்சேர் பூதப்படையைவெளிப்படுத்தி
மைஞ்ஞானத்தைப்புனைதணிகை வரதன்குடங்கையமர்வேலே. (௮)

ஐம்பூதத்தானாகியதோ ராக்கைக்குழையுட்படுமுயிர்தான்
கம்பூதத்திற்செயும்வினையாற் கடுகுந்துயர்தீர்த்தருள்புரிவாய்
வெம்பூதத்தைத்தடிந்துகை மேவும்புலவன்றனைப்புரந்து
செம்பூதரமாந்தணிகையமர் செவ்வேள்கரத்திற்சேர்வேலே. (௯)

விச்சாசுத்தமாயையினில் விளையுஞானக்கிரியையொடு
நச்சாரிச்சாசத்தியினா னணுகும்பிறவித்துயர்களைவா
யிச்சாஞானக்கிரியையுமூ விலையாய்ப்படைத்துக்கதிர்பரப்பி
மைச்சார்ந்தொழுகுந்தணிகைவரை வள்ளன்மலர்க்கைத்தனிவேலே. (௧௦)

தணிகை வேல்பத்து-முற்றிற்று.



உ

கணபதிதுணை.

# திருத்தணிகைச் சந்நிதிமுறை.

பத்தாவது

# தணிகைசீர்பாதப்பத்து.

புல்லாகி மரமாகிப் புழுக்களாகிப்
புள்ளாகி விலங்காகிப் பூதமாகிக்
கல்லாகித் தானவர்வா னவருமாகிக்
காசினியின் மனிதருமாய்க் கலங்குந்தீயேன்
சொல்லாகிப் பொருளாகி விரைப்பூவாகிச்
சுடராகி யொளியாகி யனைத்துமாகி
யில்லாகித் தணிகைவரை யிருந்தான்பாத
மெண்ணினேன் பேரின்ப நண்ணினேனே. (க)

மண்ணாசை பொன்னாசை மக்களாசை
வயதாசை வடிவாசை மணியினாசை
பெண்ணாசை மனையாசை யுலகையாளும்
பேராசை கொண்டுபிறந் திறக்குந்தீயேன்
விண்ணாசைப் படுந்தேவர் பகையைச்சாடி
விண்ணுலக மளித்தருளும் விசாகன்வீணைப்
பண்ணாசைப் படுந்தணிகைக் குமரன்பாதம
பாவித்தே னென்பிறப்பைக் கோவித்தேனே. (உ)

வார்படைத்த முலைமடவார் கலவிக்கள்ளின்
மயல்படைத்து நோய்படைத்து வருந்திநாளு
மூர்படைத்த செருக்கடொறு முழலுந்தீயே
னுருப்படைத்த சராசரங்க ளுறைந்துவாழப்
பார்படைத்து விண்படைத்துச் சேடன்றாங்கும்
பாதலமும் படைத்தெவையும் படைத்துக்காக்குஞ்
சீர்படைத்த தணிகைவரை மேயோன்பாதஞ்
சிந்தித்தே னைம்புலனும் பந்தித்தேனே. (ங)

செப்பெழுது முலைமடவார் கலவிக்கள்ளைத்
திருடரைப்போற் றினந்தின்று மறைத்துமாந்தி
யொப்பெழுதும் படமேந்தி மடன்மாவேறி
யோயாது தெருக்கடொறு முழலுந்தீயே
னெப்பொழுதும் வள்ளிதெய்வ யானைமாத
ரிருபுறமு மகலாத விறைவனீல
முப்பொழுது மலர்காவி வரையான்பாத
மொழிந்திட்டேன் சஞ்சிதத்தை யொழிந்திட்டேனே. (௪)

பாலேசொல் வேயேதோள் பவளமேவாய்
பங்கயமே முகமாவின் படமேயல்குல்
சேலேகண் ணெனவுரைத்து மடநல்லார்தஞ்
சிற்றின்பப் பித்தேறித் திரியுந்தீயேன்
வேலேவிக் கொக்கைமயில் சேவலாக்கி
மேலேறிக் கைப்பிடித்த விசாகன்வேத
நூலோதுந் தணிகைவரை மேயோன்பாத
நோக்கினேன் கூற்றுவனைத் தாக்கினேனே. (௫)

பேய்த்தேரை நீரெனுமான் கணமேபோலப்
பேதையர்சிற் றின்பே பேரின்பமென்று
வாய்த்தேனைப் பருகியறி வழிந்துநல்ல
வழியறியாத் தூர்த்தரொடு மருவுந்தீயேன்
காய்த்தேனற் கதிர்விளையும் புனத்துவேடக்
கன்னிவள்ளி திருவேளைக் காரநாளும்
போய்த்தேவர் தொழுந்தணிகை மேயான்பாதம்
புல்லினே னாணவத்தைக் கல்லினேனே. (௬)

உய்யாத பாதகங்கள் செய்துகாமக்
குழன்றுமனோ வாக்குடலம் வேறாய்நன்மை
செய்யாத மூடரொடுங் கூடிமாதர்
சேயிதழ்வா யமுதுண்டு திரியுந்தீயே
னைய்யாது மன்னுயிரைப் புரப்பானெண்ணி
நாடோறு முப்பொழுது நறியநீலம்
பொய்யாது மலர்தணிகை யமர்ந்தான்பாதம்
போற்றினே னேடணையை மாற்றினேனே. (௭)

தேனுரு மலரயனூர் படைப்புமீற்றிற்
சித்திரகு தன் கணக்குந் தினங்கடோறு
மூனுரு முயிர்வாங்குங் கலவிமாத
ருருவமுங்கண் டொடுங்கி யுழலுந்தீயேன்
மீனுருங் கொக்கெனவே யமரர்தம்மை
மிகுகொலைசெய் திடுமவுணக் குழுவைச்சாய்த்தே தான்
வானுருந் தணிகைவரை யிறைவன்பாதம்
வாழ்த்தினேன் றீவினையைத் தாழ்த்தினேனே. (அ)

ஈயாதமூடமூட ரிடத்திற் சென்றே
யிந்திரனே யென்றுபல பொய்யுங்கூறி
யேயாது சாண்வயிற்றுக் கிரையுந்தேடி
யேந்திழையா ருருவினைக்கண் டுழலுந்தீயே
னோயாது தயிருடன்பால் வெண்ணெய்தாமு
மொளித்துண்டு கட்டுண்டோன் மருகனென்று
மாயாத புகழ்த்தணிகை வள்ளல்பாதம்
வணங்கினே னன்பரொடு மிணங்கினேனே. (கூ)

வாட்டடங்கண் சிறிதுநகை சிறிதுமின்னார்
வாயினிதழ் சிறிதுமுலை சிறிதுமையைக்
கூட்டியனை குழல்சிறிது மாகிநாளுங்
கொள்ளைகொள வறிவுபறி கொடுக்குந்தீயேன்
காட்டில்வளர் தினைகாத்துக் கிளியையோப்புங்
கன்னிதனைச் சேரநரர் வடிவங்கொண்டோ
னாட்டுபுகழ்த் தணிகைவரை முருகன்பாத
நாடினேன் முத்திநெறி கூடினேனே. (கo)

தணிகை சீர்பாதப்பத்து-முற்றிற்று.



கணபதி துணை.

# திருத்தணிகைச் சந்நிதிமுறை.

பதினோராவது

# தணிகைமலைப்பத்து.

பங்கயாதனன்மால்வாசவன்முதலாம் பண்ணவர்க்கிடுக்கணேபுரியுஞ்
சிங்கமாமுகத்தன்கசமுகன்சூரன் சிரமறுத்தவனுறையிடந்தான்
மங்குனேர்வேடமகளிருமரம்பை மாதருமுவந்தினிதாடுங்
கங்கைநேர்சுனைகள்பற்பலமருவுங் கைலைநேர்தணிகைமால்வரையே. (௧)

வஞ்சமேபுரியுமாயையாலவுணன் வளர்தருகிரவுஞ்சவரையி
னெஞ்சமேபிளந்தகெட்டிலைவேலோ னெடுஞ்சினந்தவிர்ந்தநல்லிடந்தான்
றஞ்சநீயென்றுவாணியோடணுகித் தண்சுனையொன்றகழ்ந்திட்டுக்
கஞ்சமீதுறையுநான்முகன்போற்றுங் கைலைநேர்தணிகைமால்வரையே. (௨)

ஆயிரத்துடனேயெட்டெனுமண்ட மளித்துடலொருவரா லழியாச்
சூரனைத்தடிந்தசேயிலைவேலோன் சுடுசினந்தணிந்தநல்லிடந்தான்
மீயுயர்தருவினறுமலரளித்து வேடர்கைவெங்கைமாமலரைக்
காயயில்வேற்கண்ணரம்பையர்வாங்குங் கைலைநேர்தணிகைமால்வரையே. (௩)

வியங்கெழுபூதப்படையொடுநடந்து வேலைசூழ்மயேந்திரமழித்துச்
சயங்கெழுதேவர்சிறையெலாந்தவிர்த்த சரவணபவனமரிடந்தான்
வயங்கெழுவிஞ்சைமாதரார்வீணை வழங்குமின்னிசைகள்கேட்டுவந்து
கயங்கெழுபிடியோடுறங்குறுஞ்சாரற் கைலைநேர்தணிகைமால்வரையே. (௪)

மாவுருவெடுத்துப்பெரும்புறக்கடலின் மறைந்திடுஞ்சூராங்கிழித்துச்
சேவலுமயிலுமாக்கியமுருகன் சினந்தவிர்ந்துறையுநல்லிடந்தான்
மூவுருவெடுத்தவொருபரம்பொருள்போன் முத்தலைச்சிகரியாயோங்கிக்
காவுருவெடுத்தசந்தனமகில்சூழ் கைலைநேர்தணிகைமால்வரையே. (௫)

மந்தரமனையகாத்திரம்படைத்த வல்லவாளசுரரைத்தாக்கி
யந்தரத்தமரர்செல்வமீந்தருளு மறுமுகன்சினந்தவரிடந்தான்
சுந்தரமுருகன்றனைமனமிருத்திச் சுழுமுனைதனில்வளியடக்கிக்
கந்தரந்தோறுமாமுனிவரர்தவஞ்செய் கைலைநேர்தணிகைமால்வரையே. (௬)

மன்னியவண்டமனைத்தினுஞ்சென்று மலையொடுகடலெனவருஞ்சூர்
தன்னொடீரிருநாள்பொருதழித்திட்ட சடானனன்சினந்தவிரிடந்தான்
தின்னியபுனத்தில்வருங்கிளியோப்புந் தெறுசினவேட்டுவக்குலஞ்சேர்
கன்னியர்கவண்கல்கற்பகமலைக்குங் கைலைநேர்தணிமால்வரையே. (௭)

சூரனையவுணக்கடலினைவெய்ய துயர்செயுமாயையினிருளைக்
கீரனைக்கொடுபோய்பூதத்தையடுவேற் கிரீசன்வெஞ்சினந்தவிரிடந்தான்
ருாலைக்கணத்தினொளிரும்வேய்மணியுஞ் சந்தனமாமுங்குங்குமமுங்
காரகிற்றுணியும்வான்றிழியருவிக கைலைநேர்தணிகைமால்வரையே. (௮)

எரிவிழித்தோன்றியொரியிறைற்சென்றே யெரிபுலையுண்டெரியுதித்த
வருடைமீதேறியுலகினைவலங்கொண் மன்னவன்சினந்தவிரிடந்தான்
குருமுலைக்குவமையெனவரச்சினைவிக் குறத்தியர்கிம்புரிப்பூண்செய்
கரிமருப்புலக்கையாத்தினைகுற்றுங் கைலைநேர்தணிகைமால்வரையே. (௯)

வீரரொன்பதின்மர்தலைவரோரிலக்கர் வெள்ளமீராயிரமென்னுஞ்
சாரதரொடுஞ்சென்றவுணரையழித்தசண்முகன்சினந்தவிரிடந்தான்
பாரிலெங்காளுமதிசயப்பயப்பப் பஞ்சுனைதன்னின்முப்பொழுதுங்
கார்நறுநீலமலர்த்தெழில்காட்டுங்கைலைநேர் தணிகைமால்மாலவரையே. (௰)

தணிகை மலைப்பத்து-முற்றிற்று.



கணபதி துணை.

# திருத்தணிகைச் சந்நிதி முறை.

பன்னிரண்டாவது

# தணிகை யுலா.

காப்பு-வெண்பா.

நிலாவுலாவுஞ்சீர் நிகழுந்தணிகை
மலையுலாவொன்று வகுப்பாம்—அலகிலாப்
பாபச்சகாயருளம் பாயாதமும்மதஞ்சே
ராபச்சகாயனருளால்.

விண்ணுலாவுந்தணிகை வெற்புலாவுங்குமரன்
பண்ணுலாவொன்றடியேன் பாடுதற்குப்—பெண்ணுலா
மெய்யானனத்தனத்தன் விண்ணவர்கோன்போற்றுநெடுங்
கையானனத்தனத்தன் காப்பு.

## புராணவரலாறு.

கண்ணிகள்.

நீர்பூத்த மேக நிறத்தவனும் வேதாவு
மேர்பூத்த வாயிரங்கண் ணிந்திரனுஞ் - சீர்பூத்த
முப்பத்துமுக்கோடி தேவர்முதலானவரு
மப்புற்றசூரபன்மற் கஞ்சியே - யொப்பற்ற
வெள்ளிவரையணைந்து வேண்டி முறையிடலு
முன்னி யிறைவ னுமைமணத்தை - நள்ளியபின்
ஆறாறு தல்விழியி லாறு பொறிதரலு
மாறு பொறியுமெழுந் தண்ட மெலாம் - வீறியிட

விண்ணவர்கண்டஞ்சி விமலன் றனக்குரைப்பக்
கண்ணுதலுந் தீயிலொரு காற்றிறையை - நண்ணுமிந்த
வெம்பொறியைக் கங்கை வியனீர் விடுதிரென
நம்பியவர் கங்கை நதியில்விடச் - செம்பொறிகள்
அக்கங்கை மாநீ ரனைத்து முறுஞ்சியிடப்
புக்கங்கையி லேந்திப் போந்துவகை - மிக்கநதி
சேலார் சரவணங்கள் சேர்ந்திமைய மால்வரையின்
பாலார் சரவணத்தின் பாலுய்ப்ப - மேலாரும்
ஆறுபொறி களுமோ ராறுமுக வுருவாய்
வீறியமு திமைய வேலைதனிற் - கூறவிண்ணோர்
௬௦. கார்த்திகையாம் பெண்கள் கசிந்துமுலைப் பாலூட்டி
வார்த்து மதுப்பூமேல் வளர்த்திடலுந் - தீர்த்தனுடன்
அம்மை மழவிடைமே லங்கணையப் பாலகரும்
விம்மியழுங் குரலை மென்செவிகேட் - டம்மையிவை
யென்குழவி யாமா றியம்புகென வெம்பெருமா
னின்குழவி கைக்கொளென நேரோடி - மின்கெழுமு
மையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
நையா முலைப்பால் நயந்தருத்தி - மெய்யான
தேவனொடு மால்விடைமேற் சென்று கயிலைதனில்
மேவி மகிழ்ந்திருக்கும் வேலைதனிற் - றேவரொடுஞ்
சங்கரனை யேத்தித் தலைப்பணியா தேவழிகொள்
பங்கயனைச் சென்னி படப்புடைத்து - மங்கச்
சிறையிட்டுச் சிட்டித் தொழிலையு மொன்று
முறையிற் பலநாண் முடிப்பக் - கறைமிடற்றோன்
வேதன் சிறையை விடுத்திடெனக் கோவெனுஞ்சொ
லோதும் பொருட்டெரியா னுக்கென்ன - யாதி
யுனக்குத் தெரிந்திடுமே லோதெனலு மத்த
னெனக்குத் தெரியு முறையின்றித் - தனித்தியம்ப
வொண்ணாதெனநீ யுரைத்தருளு மாகமச்சீ
ரெண்ணு மெனப்பணியு மீசனுக்குப் - பண்ணோர்
௭௦. பிரணவத்தி னுண்மைநிலை பேசியிசை ஞானப்
புரணவித்தை வல்லமுனி பொற்பார் - கரணமொடு
செய்யுமகத் தெழுந்த செச்சைதனைக் கைப்பிடித்து
வெய்ய வெறிமேறி விளையாடித் - துய்யசெம்பொன்
மேருமுத லாமலைகள் மேல்கீழாச் செய்யவிண்ணோர்
யாருநடுங்கி யபயமெனச் - சோருமுல
கெல்லா முனம்போ லியற்றி யரக்கர்குல
மெல்லா மறுக்க விசைந்தெழுந்து - கல்லார்

உமையாள் சிலம்பில் வருமொலிப்ப தின்னொலிரங்க
டமையா வெனப்பணிந்து சார - வெமையாரு
மோரிலக்க மாக வுரைக்கும் படைத்தலைவர்
சீரிலக்க மாயருகிற் சேர்ந்திறைஞ்சப் - போரிலக்கா
மீரா யிரவெள்ள மென்றுரைக்கும் பூதகணஞ்
சோராம லெம்மருங்குஞ் சூழ்ந்துவரத் - தேரேறிச்
சம்புவிடை கொடுப்பத் தன்கயிலை வெற்பொருவி
யம்புவியின் மேருவின்றென் பாலணுகி - யம்புரி
தாருகனைப் புள்ளின் றனிப்பெயர்கொள் வெற்பினொடும்
பேருகவை வேலாற் பிளந்திறுத்தும் - காரிருளிற்
றேவகிரி மருவித் தேவர்செய்ய பூசைகொண்டு
பாவலர்சொல் சேனாபதியாகிப் - பூவிற்
௩௰. றிருச்சேய் நல்லூரிற் சிவபூசை செய்து
வரச்சூ ரடும்வடிவேல் வாங்கிப் - பரிந்திமையோர்
தங்குருவு மந்திரியாய்ச் சார்ந்த கொடுஞ்சூர்வாழும்
பொங்குருவுந் தீங்கும் புகன்றுரைப்ப - வெங்கயமோர்
சற்றுமறி யாதவர்போற் றன்செவியி லேகேட்டு
மற்று மனுநீதி வழுவாது - முற்றுணர்ந்து
செந்தூ ரிருந்து செயவீர வாகுவினை
முந்தூருந் தூதாக முன்னனுப்பி - நந்தாரும
வாரிதியில் வீர மகேந்திரத்திற் சென்றவுணர்
தேரிவுளி தானைகரி சேனையெலாம் - போரில்
அழித்தவுண ரோடு மழியாத சூரைக்
கிழித்திருபுள் ளாக்கியும்பர் கேதம் - ஒழித்தருளி
வீரமகேந் திரத்தை வீரையிறை யாலழித்து
வாரமக வானளித்த வாணுதலை - நேரே
மணந்து கொடுஞ்சூரை வதைத்த சினமெல்லாந்
தணந்த செருத்தணிகை சார்ந்தோன் - பணிந்தோர்
கணிகந் தவம்புரிந்த கண்ணுதலோன் முன்னோர்
மணிகுண் டலமசைய வந்தோன் - துணிவுடைய
நந்திநதி யொன்றழைத்து நற்குகையில் யோகிருந்து
வந்து பணிய வரமளித்தோன் - சந்த
௪௰. மலையக் குறுமுனிவன் வந்திக்க ஞான
நிலையைச் செவியுரைத்த நித்தன் - கலையுணர்ந்த
சத்த முனிவர் தவத்துக்கு வந்துபர
முத்தி யளித்த முதற்குரவன் - புத்தியுடன்
விண்டு தவம்புரிந்து வேண்டி முறையிடலும்
வண்டி கிரியீந்த மணிமார்பன் - பண்டுசிர

தாக்கும் பிரமன் றவம்புரியக் கண்டுலகை
யாக்கும் படைப்பளித்த வாறுமுகன் - பூக்கருது
மிந்திரனீ லோற்பலங் தந்தேத்தும் புரந்தரனுக
கந்தரநா டாளு மரசளித்தோன் - வந்திரவி
தன்குலத்தி லேபிறந்த தாசரதிச் செவியில்
மின்குலவு ஞானம் விரித்துரைத்தோன் - பொன்குலவு
சேடனொடு வாசுகியுஞ் சேர்ந்து தவம்புரிய
வோடியவர்க் கருளு மும்பர்பிரானை - நீடுபெறு
தேவர் முனிவர்பெருஞ் சித்தரெவ ரும்பணிய
மாவரங்கண் முன்னம் வழங்கினோன் - நாவின்மகள்
பூசித்து முப்பொழுதும் போற்றி வணங்கிட லு
மாசித்தி வாழ்வருளும் வண்மையான் - வாசித்த
தந்திரியாழ நாரதனுஞ் சார்ந்து தவம்புரிய
வந்துரிய தோழமையால் வாழவிதந்தோ - னொந்த
௩௦. வகோர னெனும் பெயர்கொளந்தணன் மெய்நீங்கா
விகாரந் தனைத் துரந்த வேலன் - ப[illegible]ரம்
பலமருவு மிந்துவெனப் பாங்கியர் [illegible]றப்பண்
ணலமருவும் வேடர்குல நங்கை - நிலமருவு
செந்தினைக் காக்குட்புனத்திற் சென்றுமடப் பாவையுற
வுந்தினைமா வுருவேதவு மு[illegible]ழசனைமேல் - வந்து
விருத்தக் கிழவனுய் வேங்கையாய வேட
ரொருத்த ரறியா தொளித்த - வருத்தமுற்றேன்
தண்ணீ ரளித்தெனைத் தண்சுனையைக் காட்டியிதி
லுண்ணீ ரெனப்புனலை யுண்டபின் - பெண்ணீர்மை
[illegible]ண்டு தரியாமற் சாரிமை [illegible] பூவையே
யொண்டொடியே தெள்ளமுதே யோதிமமே - வண்டுபடர்
வல்லிக் கொடியே மயிலே குயிலனமே
கொல்லிச் சிலம்பியுங்கை கூப்பியிடு - மெல்லியலே
வேய்த்தனைத் தாரெனை விடாய்தணித்தாய் கோவையிதழ்
வாய்த்தேனைத் தந்தென் மயலதிர்ப்பாய் - வாய்த்தசுனைப்
பச்சிளநீர் காட்டிப் பசிதணித்தாய் புதுக்கனக
கச்சிளநீர் தந்து விடாய்களையாய் - யிச்சையுடன்
இவ்வேளை யேயென் றிணையடியிற் றாழ்ந்திடலு
மவ்வேளை கோவித் தவண்டப்ப - செவ்வேளு
௪௦. முன்னவனை வெங்கரியாய் முன்புவரக் காட்டுதலு
மன்னவளு மஞ்சி யணைத்திடலும் - பின்னவனுங்
காளையாய்த் தன்னுருவங் காட்டியவண் மருவிக
கோளையார் சீறூர்க் குடிசையிற்போய் - காளையார்

கண்ணுளை வேட்டுவர்கள் காஞ்சமனள்ளிருளி
னண்ணார் தொழும்புயமே னன்கேந்தி - யெண்ணாத்
திருடனைப்போற் கானிற் றிருடிவா வேட
முருடரெலாங் கண்டு முனிந்து - கருடனொடு
மாறுகொளும் பாம்பினம்போன் மாய வணங்கழலுந்
தேறி யவர்சோகந் தெளிவித்து - வீறிவளர்
கல்லார வெற்பணைந்து கல்யாணஞ் செய்தவர
மெல்லார்க்கு மீந்தருளு மெம்பெருமான் - வில்லாருஞ்
சூரன் கொடுபோஞ் சுரர்வள மெலாங்கொணர்ந்து
சேருமணி நீலவரை சேர்வித்து - யாருஞ்சொல்
சீபூரண கிரியாய்ச் செய்தோன் சராசரத்து
மாபூரணமாக வாழிறைவன் - நீபன்
றிருநந்தி யாறதனிற் சென்றாடி னோர்க்குத்
திருநந்தி வீறவருள் செய்வோன் - பெருகுஞ்
சிவகங்கை தன்னைத் தெரிசித்தோர் தம்மைச்
சிவகங்கை யானுலகஞ் சேர்ப்போ - னவமார்
சரவண தீர்த்தத்திலெவர் சார்ந்தாடி னாலும்
வரவணல மீந்தருளும் வள்ளல் - பரவு
பிரமசுனை மூழ்கும் பெற்றியோர்க் கென்றும்
பிரமபதமளிக்கும் பெம்மான் - வரமுதவு
விண்டு சுனைப்படிந்த மெய்யடியார் யாவருக்கும்
விண்டு பதவியருள் மெய்த்தேவன் - குண்டுபடு
மிந்திர தீர்த்தங்கண்டோர் யாவருக்கு மேலான
யிந்திர போகங்கொடுக்கு மெங்கோமான் - சத்தமுஞ்
சத்த முனிவர் தருஞ்சுனையே மூழ்படிந்தோர்
சித்தமுற மெய்ஞ்ஞானந் தேர்விப்பான் - சுத்தன்
அகத்தியதீர்த் தம்படிந்தோர்க் கன்றே யவர்த
மகத்திருளைப் போக்கு மமலன் - மகத்துவஞ்சேர்
வாசுகி தீர்த்தம்படிந்து வந்திப்போர் யாவரையு
மாசுகியாய் வாழ வரந்தருவான் - பூசைபுரி
சேடதீர்த்தம் படிந்தோர் தேசம் புரந்திடவி
சேட பலமுதவுஞ் சீராளன் - பாடமரும்
சித்திக் குகையதனைச் சேவிப்போர்க் கட்டமா
சித்திப் பயனுதவுஞ் செங்கடம்பன் - முத்திதருந்
திங்கடொறுங் கார்த்திகைநாட் சென்றுபணி வோரெவர்க்குஞ்
சங்கமருக் கன்னந் தருவோர்க்கு - மங்குறொடு
மண்டபங்க ளம்பலங்கண் மாமதில்நன் கோபுரங்கள்
தண்டலைகள் கூபஞ் சமைப்போர்க்கும் - புண்டரிக

வோடைமட மாலயங்க ளோங்குதிரு வாபரண
மாடை மணிமூர்த்தி யமைப்போர்க்கும் - தேடரிய
காலைவிழா வுச்சிக் கமையகலிற் பூசைவிழா
மாலைவிழாக் கட்டளைகள் வைப்போர்க்குஞ் - சோலைவிழா
கார்த்திகையிற் கார்த்திகைநாள் கற்பூர தீபவிழா
வார்த்திகை மிக்கேபுரியு மன்பினர்க்கும் - கீர்த்தி
பாரவி மயில்கோழி பசுவெருது தந்து
விராவிப் பணிவோர்க்கு மென்மேற் - றாரதலஞ்சேர்
இன்ப மறம்பொருள்வீ டென்னுமிவை நான்கருளித்
துன்பங் களைவிலக்குஞ் சோதியா - னின்பப்
புழுகணியு மேனியின்மேற் பூச்சுந் திருப்பூச்
செழுபிறவி தீர்மருந்தென் றீவான் - செழுமலரோன்
கல்லார மாமலையான் கற்பகத்தா னேர்துதிருக்
கல்லார மாமலையான் கற்பகத்தான் - செல்லார்
பரங்குன் றலைவாயான் பாலனல்லார் மீதக
பரங்குன் றலைவாயான் பாலன் - வரங்கொடிரு
வேரகத்தா னென்று வினன்குடியா னெப்பொழுது
மேரகத்தா னென்று வினன்குடியா - னோரா
௧௦. ரகங்குன்று தோறாட லாறு னெனவென்
னகங்குன்று தோறாட லாறுன் - மகந்தன்று
சோலைமலை யாதரித்த சுந்தரத்தா னென்பிறவி
வேலைமலை யாதரித்த வேதாந்தன் - சாலப்
பருவேங் கடமலையார் பாடலுறு தோங்குந்
திருவேங் கடமலைவாழ் சீல - னுருவாம்
இருக்கந்த மாதனமா யேய்ந்ததுபோ லென்றுந்
திருக்கந்த மாதனஞ்சேர் செல்வன் - உருக்கி
முதிர்காமத் தான்மயங்கு மூடருளஞ் சேராக்
கதிர்காமத்தான் வடிவேற் கந்தன் - மதியாத
சூரா விசாகத்தான் றோன்றும் விசாகத்தா
னோரா விசாகத்தா னேகத்தான் - சீராருங்
காந்தந் தனிலுறைவே காந்தன் பலவிதவு
காந்தன் வலாரிமகள் காந்தனா - காந்தமணி
வள்ளிக் கிரியினன் வள்ளிக் குழியிலெழும்
வள்ளிக் கிசைந்தருளும் வள்ளியான் - றுள்ளு
மயிலா னயிலான் மையிலா னையிலான்
மயிலா னையிலான் மையிலா - னெயிலான்
திருமான் மருகன் றிருமான் மருகன்
ஒருமான் மகவான் மருகன் - பெருமான்

௧௦௦. உருவ னருவ னுபய னபயன்
முருகன் முருகன் முருகன் - ஒருவனுமை
சேயானான் றீயவர்க்குச் சேயானான் றன்னுருவஞ்
சேயானான் றன்பெயருஞ் சேயானான் - றீயானான்
விண்ணானா னீர்கால் விதுவிரவி யாருயிராய்
மண்ணானா னண்டவகுப்பான் - பண்ணானான்
கால மிடந்திக்குக் கடும்பக லிராவானான்
மேலமருந் தத்துவத்தின் மேலானான் - கோலுந்
தனுகரண போகமுயிர் சாரும் புவனம
வினைபகுதி பந்தமொடு வீடாய்ப் - பினுமுலகை
ஆக்கிப் புரந்தழிக்கு மம்மூவ ராகி யருள்
தேக்கிப்பே ரின்பமருள் சிற்சொரூப - னாக்கி
உலகை வலமாய்க்கொடியி லோடிவருந் தண்டை
கலகலெனும் பொற்சதங்கைக் காலன் - றிலகநுத
லோராறு மா முகத்தா னோராறு சென்னியினு
னீராறு கண்செவிகை யேந்தினான் - ஓராறு
செவ்வாய் மலருடையான் செச்சையணி மார்புடையா
னவ்வாத காலாயுதக் கொடியான் - றவ்வாத
வாறுசமையத்தா னாறெழுத் தானண்ட ரெலாங்
கூறுசமையம் பார்த்துக் கும்பிடுவான் - றேறு
௧௧௦. சுருதிபல வாகமநூற் றோன்று மிதிகாச
மிருதிபுராணந் தொடரா மெய்யன் - கருதுங்
குறிஞ்சிக் கிழவன் குலாவுய வருடத்
துறுஞ்சித்திரைத் திருநாளும்பர் - புறஞ்சுற்ற
ஆழிக்கொடியா துயர்ந்த கொடிக் கம்பத்திற்
கோழிக் கொடியேற்றிக் கொண்டதற்பி - னாழிற்
குமாரதந்திரப் படியே கொண்டருளிப் பூசை
விமானமுதல் வாகனங்கண் மீதே - தமாதரொடு
வீதியுலாப் போந்து விளையாடு நாளொருநாள்
சோதியுலா மாணிக்கத் தூணிரையின் - மீது
பவளத்தின் போதிகைமேற் பச்சைமணித் தூலந்
திவளுற்ற பொற்பலகை சேர்த்துத் - தவள
மணிக்கொடுங்கை வைத்து வளர் பளிங்கின்பித்தி
துணித்தமலர் மாலை தூக்கிப் - பிணித்ததிரு
மண்ட பத்தில்வந்து மடங்கற் றவிசேறி
விண்டலத்துச் சூரியன்போல் வீற்றிருந்து - பண்டே
மருவுபொறி யாய்ச்சுவற்றும் வண்கங்கை மாநீர்
திருவுரு விற்காலுந் திறம்போல் - மருவுமலர்

இந்திரதீர்த்தங் குடைத்தி லேத்திமறை யவர்கண்
மந்திரத்தி னோடு மகிழ்ந் தாட்டிச் - சந்தியனை
௧௨௦. நூற்றுச் சமைந்தனைய நொய்ய திருவொற்றுடை
யாற்றிரு மெய்யீர மகற்றியே - போற்றும்
பருதியிசை மேகம் படிந்ததெனக் கார்க
ளொருவடைவையைச் சூழ்ந்த தொப்பப் - பொருவின்மக
மேருவின் மேற்கங்குல் விரிந்ததெனத் தந்தைகரி
யீருரியைத் தாம் போர்த் திருந்ததென - ஆரும்
மயில் நீலச்சாயை வளைந்ததென நீலம்
பயிலுந்து மேற்படிந்த தென்ன - வியம்பார்க்கும்
பூமாதா கண்கள் புதைந்ததென வண்டினங்கள்
பூமேனி யென்றணைந்த பெற்றியென - நாமேவு
செவ்வேளாய் நின்ற சிறப்பை பொருவி யொரு
மைவேளாய் வேடங்கொண் மாட்சியென - நைவேள்
அழகு கவர்ந்தசெம்பொ னுடைமேலாம் பச்சைப்
புழுகு சார்ந்தொழுகப் பூசி - யிழிவில்
கடி சூத்திரத்திற் கௌபீனஞ் சாத்திப்
படியேழும் விற்குழி மழிற் பட்டை - யிடைசேர்த்தி
யம்பூவர்க் காசாமனன் றாய்ந்துகூறு யிட்டதுபோற்
செம்பார்பின் முப்புரிநூல் சேர்த்தணிந்திட் - டிம்மாதர்
மோகா விகாரத்தின் மூழ்கி மயங்கியிட
வேகாசந் தோண்மே லிசைவித்து - வாகான
௧௩௦. வாறுதலை மீது மாறுதலை யானுதற்கண்
வேறு பொறிபடர்ந்து மின்னுதல்போல் - பேறுபெறும்
உம்பர்பிரான பூசை யுஞற்றி யுவந்தளித்த
செம்பொன் மணிமகுடஞ் சேர்வித்துப் - பம்புகதிர்
மூன்னான்கு சூரியரு மூன்னான்கு வெற்புறல்போன்
மூன்னான்கு தோண்மீது மோர்ந்தசைய - மூன்னான்கு
செஞ்செவியின் மாணிக்கஞ் சேர்மகர குண்டலங்க
ளஞ்செவிய தாக வலங்கரித்து - நஞ்சுநுகர்
தந்தைநுதற் செங்கண் டநயனுத லுற்றனபோற்
செந்திலத மிந்துநுதற் றீட்டியே - சந்ததமு
மாயூர நாதமென்ன வாசுகிதந் திட்டமணிக்
கேயூரம் பொற்றோட் கிரிக்கிசைத்துத் - தேயாது
போர்புரிந்த சூரனுடல் போக்கும் படைக்கரத்திற்
கார்புரிந்த நீலமணிக் காப்பணிந்து - நீர்பரந்த
வண்டத் தானத்திருக்கு மாரன்முலைப் பாலுண்ட
கண்டத் தானத்திற் கடுக்குரான் - சண்டைதரில்

அஞ்சு நவக்கிரக மண்டி யொளிர்தருதனைத்
துஞ்சு நவரத்னத் தொடைபுனைந்து - நெஞ்சதனில்
ஆரன் முலைப் பாலிரங்க வங்கைகொடு தைவரல்போ
லார வடமசைய வாங்கணிந்து - தாருகனை
கசo. யட்டரியின் சக்கரத்தை யாகத் தணிந்திருந்த
திட்டமெனப் பொற்பதக்கந் சேரவணிந் - திட்டமருள்
கல்லார வெற்பனெனக் கல்லார மாலையொடு
கல்லார மாலைபல கைபுனைந்து - மெல்லாரச்
செச்சை புனைந்த திருமார்பி னீபமொடு
செச்சை மலர்மாலையுஞ் சேர்த்தணிந்து - கச்சிறுக்கி
வட்டுடையிற் குற்றுடைவாள் வண்மைபெறச் செருகிப்
பட்டுடையின் மேலுதர பந்தமுறுங் - கட்டி
வலது கணைக்காலில் வயங்கு கழல்வீரஞ்
சொலுவது போலார்ப்பத் தொடுத்து - குலவுமறை
நான்குந் தனித்தனியே நன்னின் றுதித்திடல்போல்
வான்குலவு தண்டை மணிச்சதங்கை - கான்குலவு
சாப்பூ னுரத்தடர்பொற் சலங்கையொ டாபுரந்தாட்
பூம்பூ ணதமாகப் பூட்டியே - மேம்பும்
பிரணவத்தின் முப்பொருளும் பேதா பேதத்தாற்
பரிணமித்து வீற்றிருக்கும் பண்போல் - இரண
மருவாசிகைக் கூத்தன் மாதொடுங் கூடித்
திருவாசி கையிடையே சேர்ந்து - பருவாரும
ஆறு சுவையமுத மாயமுது வாயமிப்ப
ஆறுமலர் வாய்கொடா று மாமருந்தி - நூறியநெய்
கருo. தக்கோல மேலமிலவங்கஞ் சாதிக்காய்
கற்பூரஞ் சுண்ணம் படைக்காய் சேர்த்து - பொற்பார
பகலிடை முப்போது மலர் பங்கமுகப் போதைத்
திகழும் வலச்செவியிற் சேர்ப்ப - மகிழ்வால்
அனற்றூப தீபவா ராதனையுங் கண்டு
தனைத்தானே யென்றுலகஞ் சாற்றும் - துவனித்தபொருள்
தன்னையறிவித்திடல்போற் றன்சாயை மன்சாயை
தன்னை நிராடி தலிப்பார்த்துப் - பன்னுதிரு
நாவி னெழுதலன்றி நற்பனையி னேட்டெழுதாப்
பூவிலெழு மந்தணர்சொற் பொற்கவியும் - மூவரெனும்
சம்பந்தரப்பர் சடைய னருள் சுந்தரரு
ரெம்பந்தநீங்க வெடுத்தியம்பும் - செம்பந்தத்
தேவாரத் தோடு திருவாத வூரர்புகல்
மூவாத*மான திருவாசகமும் - நாவாரச்

சித்தர் புகன்ற திருவிசைப்பா வும்புகழ்ந்து
பத்தியுட னோதுதிருப் பல்லாண்டுந் - சத்தி
பதிந்த முனிவருக்குப் பண்பார் கயிலை
வதிந்த சனக்குமார வள்ளல் - முதிர்ந்ததவஞ்
செய்யுந் தலமிதுவே செப்பவரி தாமிதன்சீ
ரைய மிலையென் றதன்பெருமை - மையலறத்
கூ0. தேற்றிவிடை கொடுப்பச் சென்றுதவஞ் செய்தவர்கள்
போற்றுந் தணிகைப் புராணமுடன் - சாற்றும்
அருணகிரி நாத னறைந்த பதினொரு
யிரகவிதை யென்றுலகில் யாரு - முரைபுகலுந்
தெய்வத் திருப்புகழுஞ் செஞ்செவிகள் பன்னிரண்டி
னெய்தத் தனி கேட் டெழுந்தருளி - வையிலைவேல்
அத்திர தேவைக்காவ லாய்பரிசு முன்னேவிச்
சித்திரநே ரானைவிரு தேவியரோ - டொத்து
யடைப் பள்ளியாக மருவியிடுஞ் சாலை
படைப்பள்ளி கொள்ளறையும் பார்த்து - கடைப்பள்ளி
யானைமுகன் றொந்தி யசைய முனைநடப்பக்
கான முகவீணை கனிந்திசைக்கும் ஞான
முனிப்பாங்கன் கைலாகு முன்கொடுப்ப நீதி
யுனிப்ப ங்கர் மாகிரிதாழ்ந் தோத - வினிப்பான
வொன்பதின்மர் தட்டியாக ளோங்கியவாள் கேடகமு
மென்கரங் கொண்டே யருகின் மேவிவர - வன்புருவா
நந்திமுனி யோமோடு நன்முனிவர் செந்தமிழைத்
தந்தமுனி யகைக தலைகூப்ப - கந்தரனு
பூதியலங்காரம் புகழ்வருப் டந்தரசி கரந்
தோதுகினி யாயிருந்த பத்தமனு - மாதிரு
கஎ0. காற்றுப் படையியப்பி யங்கமுறு வெங்குட்ட
மாற்றிச் சுனைமுழுகு வண்ணகவியுந் - தேற்றியன்போ
முட்டையெனை வைத்து மூர்க்கரத்தைப் பாடுகெனத்
திட்டமுட னோர்வெண்பாச் செய்தோனுங் - கிட்டிவட
பூசாரு முப்போதும் பூசைபுரி யாதிசைவ
மாசாரும் வீர மகேசுரரு - நீசாரும்
முன்னு மிருபுறமு மொய்த்து நெருங்கியிட
வன்னவரை வீரவா கண்ணனுமே - தன்னிருகை
வெள்ளித் தடியால் விலக்கியிட வாலயத்தி
னுள்ளிற் றிருவலமா யுற்றதற்பின் - புள்ளிப்
பசும்பொற் றசும்புநிரை பாயொளியான் மேகம்
விசும்பிற் பசும்பொ னிறமேவ - அசும்பபுனற்

சந்திரகாந் தத்தமைத்த சாளரத்தி னூடேது
மிந்திரவி யென்றுங்ல வென்றுரைப்ப - வந்தாங்குசேர்
நீலக்கொடியி னிழல் பாயுந் தாரகைகள்
நீலமலர் வான்பூத்து நின்றதென - மேலோரும்
மாணிக்கத் தூணொளியால் வானூறு பூராறுஞ்
சோணைத் திருநதியாய்க் தோன்றவெழில் - பூணுந்
திருக்கோ புரவாயில் சென்று புறம்போந்து
பெருக்கோதைக் கங்கைப் பிராட்டி - யிருமோது
௧௮0. மைந்தன் வெயிலின் வருந்தாமல் வானிழலாம்
விந்தையென வெண்குடைகள் மேனிழற்ற - அந்தகதி
செய்கை யிரண்டாற் றிருமேனி மைவரல்போற்
பொங்கு கவரி புடையிரட்டத் - துங்கமயில்
கண்டுதலை நடுக்குங் கட்செவிகள் போலவரி
மண்டுறு சாந்தாற்றி மருங்கசைப்பத் - தண்டினுக்குங்
காவற் கொடியான் கடிதுமுனஞ் செல்வனெனச்
சேவற்கொடி முனம்போய்ச் சேணாப்பக் - காயுற்ற
பொன்மலர்கள் வானோர் பொழிய முனிவர்குழாஞ்
சொன்மலர்க ளுவாற் சொரிந்துதொழப் - பன்மலருந்
ஏனோர் சொரிய விசைதேவ துந்துபியுங்
கானூரும் வேடர் கருந்துடியும் - ஆனேத
கல்லரி சச்சரி தண்ணுமை கைச்சதி
மல்லரி துத்தரி மத்தளி - சில்லரி
ஆகுளி பேரிகை யானகம் வார்குடப்
காகுளி தாரைகள் காகளம் - நாகம
முரசு திமிலை முருடு முழவு
பாச பதலை படகம் - காடியுடனே
மேகத் திடிபோல் விரியுங் கனைகல்போ
லேகத்துவமா யெழுந் தார்ப்ப - வேகத்திற்
௧௯0. றூனவரை முன்னந் தடிந்தமுரு கோன்வந்தான்
வானவரைக் காத்திடுஞ்சீ மான்வந்தான் - தானதன்மஞ்
செய்யாதவ ரிடத்திற் சேராதவன் வந்தான்
மையாரு நீலமலை யான்வந்தான் - மெய்யாரும்
வேலாயுதன் வந்தான் வென்றிக்கொடி படைத்த
காலாயுதத் திருக்கை யான்வந்தான் - மாலாதி
வந்தாரை வாழ்விக்கும் வள்ளற் குகன்வந்தான்
மந்தாகினிக்கு மகன் வந்தான் - கொந்தாருஞ்
செச்சைத் தொடைபுனைந்த செவ்வேளிதோவந்தான்
பச்சை மயிலேறும் பரன்வந்தான் - வச்சிரத்தின்

இரண்டா யிரவெள்ள மென்றுரைக்கும் பூதர்
இரண்டாயிர முகமாய்ச் செல்ல - முரண்டாவும்
நூறாயிரமாய் நுவலும் படைத் தலைவர்
வேறாயுதங்க ளொடு மேவிவரப் - பேறான
விண்ணோ ரொருபால் விரவி வடமீர்ப்ப
மண்ணோ ரொருபால் வடமீர்ப்பப் - பண்ணுறு
நரம்பினிசைப் படியே நாடகத்திற் கேற்ற
வரம்பை முதனல்லா ரொருங்காட - நிரம்பும்
அகிற்றூமம் சாம்பிராணி யாவி சரற்கால
முகிற்றூமம் போற்றிசைகள் மூடச் - செகச்சோதிக்
காடை விளக்குங் கருப்பூர தீபமும்பொன்
னாடை விளக்கு மணிவிளக்கு - நீடும்
உஉ0. பருதி விளக்கம் பகல்விளக்க தாகத்
தாரகத்தை வாயுவிறை தாண்டத் - திருமறுகிற்

## குழாங்கள்.

செல்ல வயன்மால் திருநாட்டுப் பூவைமார்
கல்லவிர் செஞ்சூட்டுரகக் கன்னிமார் - நல்லிசையாழ்
கந்தருவ நாட்டுறையுங் காரிகையார் மேருமுடி
நந்துருவ நாட்டிலுறை நங்கைமார் - முந்துருவ
விஞ்சையர் நாட்டிற் றிகழ்ந்த மின்னு மெழிலியக்கர்
தஞ்சயநாட் டிற்சிறந்த தையலார் - கொஞ்சும
அளகா புரிவாழு மாயிழையா ரின்ப
முளகாவிற் பொற்கொடிபோ லொப்பாம் - இளையார்
மலையார் முலையார் மலையார் முலையா
ரலையார் முலையா ரவிர்பூ - விலையார்
உருவிழா தெய்தி யுலகுலாப் போந்தோன்
றிருவிழாக் காணத் திரண்டு - கருவிழா
வேதாவைக் குட்டி விலங்கிருகா லிட்டவென்னை
வோதா யெனத்திரண்ட வோதிமமோ - நீதானே
நாமுற்ற சூதத்தை நன்றழிந்த தெனவென்று
தாமுற்றுஞ் சூழ்குயிலின் றன்னினமோ - காமுற்று
வாழு மொருதெய்வ மடப்பிடிபோல வந்தணையச்
சூழும் பிடிக்குலத்தின் றோற்றமோ - தாழும்
உ௩0. புனமான் மருகன் புனையெழிலைக் காண
வனமானெ லாஞ்செறிந்த வாறோ - சினமானும்

முப்போதும் பைங்குவளை முப்போதும் வீசுமணந்
தப்பாது சூழளியின் சங்கமோ - வெப்போதும்
நம்மினத்தி லென்றாறு நாயகனைக் கண்டணைவோம்
வம்பி னெனக்கூடு பயிலினமோ - அம்மதிபோற்
றேயாத வாறுமுகத் திங்களைக்கண் டோடிவரும்
வீயாநிலா முக்கி டெல்லினமோ - மாயாப்
புகழோது மோர்கிளியைப் போலெமையுங் காத்தா
லிகழ்வே தெனக்கிளிக ளெல்லா - மகிழ்வாகிச்
சேர்ந்த திறமோ திருப்புயங்க ளாம்வரைமேற்
சார்ந்து படாக்கொடிக டாங்குழுமி - வார்ந்தெழுந்த
சீரோமை வெளழிந்தான் செயவே ளிவனெனச்சூழ்
காரோதி வாய்ந்தகருங் கட்பவையோ - நேராகு
மென்னனிலைத் தேர்மே லேழுநிலைக் கோபுரமேல்
வன்னமணி வாகனமா மண்டபமேல் - உன்னதஞ்சேர்
மேலைத் திருமதின்மேல் வெண்பளிங்கு மாளிகைமேல்
காலைத் தருநிலைக் கற்படிமேல் - மாலைதொடர்
பூங்கா வனத்திற் புதுநிலா முற்றத்தி
லோங்கா வனத்தி னுயர்கிரியிற் - பாங்கான
உ௪௦. அம்பலத்திற் சூளிகையி லாடரங்கிற் பாடரங்கில்
ஒம்பலருஞ் செய்குன்றில் வந்தேறி - யும்பர்பிரான்
ஊரு மணிக்குறங்குஞ் சண்முகமும் பன்னிரண்டு
தோளுங் கடம்புந் துளசியும் - நீளும்
கருணைபொழி பன்னிரண்டு கண்ணுஞ் செவியு
மருணமணிக் குண்டல மீராறுங் - கிரணமுறு
கையார றிரண்டிங் கடம்பணியு நூன்மார்பும்
வையாருஞ் செங்கை வடிவேலுந் - துய்யாருஞ்
செம்பட் டுடையுந் தெரிசித்தார் மனமதன்பூ
வம்பட் டுடையுமன யாயெழுந்து - கும்பிட்டு
யாதுங் கொடாதவரே யாயிடினு மம்பொன்மலர்த்
தாதுடையார் தம்புறம்போய்ச் சார்ந்துவிடார் - ஆதலர்கள்
என்னு முறைபோ லெழுந்தெழுந்து வண்டினங்க
ளின்னு மலர்க்குழன்மேற் சூழ்ந்திரைப்ப - பன்னிருகை
சேர்ந்த வுருவைத் தினகரனென் றஞ்சி யிருள்
சோர்ந்ததுபோல் வார்குழல்பின் சோர்ந்தலைய - வேந்தன்
புயவரைகண் மீதேறும் பொங்குங் கரிபோற்
குயவரைகண் மார்பிற் குலுங்க - வியவரெலாம்
மாகலைகள் வல்லவனை வாழ்த்தி வியந்திடல்போல்
மேகலைகள் சத்தம் விரவியிடக் - கேகயனைக்

உரு௦. கட்டி யணைமினெனக் கைகளுக்குச் சொல்லுவபோ
லிட்ட வளைக ளினிதொலிப்ப - வட்டநிலத்
தெம்பெயர்கொள் வெற்பிற் கிறைபாற் செலுஞ்செலுமென்
றம்பரி புரங்கானி லார்ப்பரிக்க - செம்பொன்மணித்
தேரெதிரே யோடிவந்து தெண்டனிட்டார் மன்னவரெலாங்
காரெதிரே கண்டதெனக் காதலித்தார் - யாரெதிரே
யொப்பாவா ரிங்கிவர்க்கென் றேழுவார் பொன்வளைகள்
கைப்பாவா தென்று கழறுவார் - குப்பாயை
கொண்டாள் கலையென்பார் கோதைவடி வேலர்தமை
பெண்டாள் கிலாளென்று பேசுவார் - கண்டாளோ
மாயக் குறத்தி மயல்மருந்திட் டாளோநங்
காயக் குறத்திக்கார் காணென்பார் - சேயோன்
மலையை மறைத்து வளர்புதர்போற் றுங்கி
முலையை மறைத்தே முடிற்றென்பார் கலையையொரு
பெண்ணுக்கு மாயன் பெருமருந்தே யுடம்பைப்
புண்ணுக்கும் காமத்தீ பொல்லாதே - விண்ணுக்கும்
வண்டணிகை மேல்வாழ் வணிகமே சோர்ந்தொழுகும்
வண்டணிகை யேறும் வகையுரையீர் - வெண்டமருங்
கொன்றைக் குழலுக்குங் கொல்வேற்றின் மாமணிக்கு
மின்றைக் குழலுமெமக் கருளீர் - துன்றுவஞ்சக்

உசு௦. கொக்கை யிரண்டாய்ப் பிளந்தீர் கூவுகுயில் வாழுமிந்தக்
கொக்கையிரண்டாய்ப் பிளந்தாற் குற்றமோ - மிக்க
கொலையசத்தின் வீறடக்கிக் கொண்டதெம் மேற்பாய்
மலையசத்தின் வீறடக்க மாட்டீர் - தலையடித்துக்
கோவேதனை யடக்குங் கொற்றவரே மைத்துனனெய்
பூவேதனை யடக்கப் போகாதோ - நூவேலால்
அன்றுகடனீ ரனைத்துஞ் சுவற்றி விட்டீர்
இன்றுஞ் சுவறவயி லேவிடீர் - நன்றுதெய்வ
யானையணை யாகத்த ராளீரே யெங்கண்முலை
யானையணை யாகத்த ராகீரோ - கானிற்
குறமானை நீர்புணரக் குப்பிட்டு ரெங்கண்
மறமானை நீர்புணர வந்தீர் - திறமான
ஆறுதலையுடையீ ரன்போ டெமைப் பணிந்தாற்
றேறுதலை யெமக்குச் செப்பீர் - கூறும்
இருமாதுவை யாள்வீ ரின்று நுமை வேண்டி
வருமாதவை யாள மாட்டீர் - குருவாரும்
நீலத்தாற் பேரின்ப நேயமல்லாற் சிற்றின்பக்
கோலத்தார் தாமணையக் கூடாதோ - மாலைக்

கடம்பணியா மார்பிலெமைக் காதலித்துக் கூடு
மிடம்பணியா தேக வியல்போ - தொடர்ந்த
உஎ0. வெமக்கல்ல வாமென் றிசைந்திடு மென்பார்
தமக்குள்ளே , நார்புகல்வ தாஞர் - கமைத்தவத்தால்
விட்ட வொருத்தியின்ப மேவியிடப் பாலுற்ருள்
பண்ணி லொருத்தி மகாதவசு - பண்ணி
வலந்திருந்தா ளாதலினிம் மண்மாதரே பெண்
ணலத்துயர்ந்தார் வெற்றிமை தென்பார் - நிலைத்ததவஞ்

## பேதைப்பருவம்.

செய்யகிலோ மன்றென்பார் செய்யகிற்பா ரின்றென்பார்
மையலுறை பற்பலசொல் மங்கையருள் - ஐயசிலா
டானா ருணையென்பார் பார்த்தா லுணையென்பார்
நேரார் துறவறத்தைச் சேர்ந்தவர்போல் - வேராம்
கலைதுறந்தார் பூ மறந்தார் சாவவெல்லு நாணி
னிலைதுறந்தா ரையறிவு நீத்தார் - விலைசிறந்த
சங்கந் துறந்தார் சடையாங் குழல்விரித்தா
ரங்கமெலா முத்தணிநீ றாயினர் - அங்கவன்மைச்
சத்தியதிற் கொத்தவிதை சார்ந்து பரிபாக
முத்தியறிந்தோ மெனவாய் மூடினர் - குற்றியென
நின்ருர் பரவசமாய் நிலமயிலோ னுருவத்
தொன்றுகி நுரிவரு ளோர்பேதை - மன்றல்புரி
மாரன் சிலைக்காய் வளரு மிளங்கரும்பு
நாரிக்கா காதலிள நற்சுரும்பு - நாரியிடை
உ௮0. பூட்டற்கிணங்காத பூந்தாமரை யரும்பு
வாட்டு குடைக்காகா மதிக்குழவி - யீட்டுபுகழ்
கூறவிரு தாதகோகிலத்தின் மென்பிள்ளை
போறு பரிபாகா விளங்கிள்ளை - வீறமதன்
தேருக் கிசையாத தென்றற் சிறுகொழுந்து
மார்பிற் புனையா மருகொழுந்து - வீரியவேள்
வெற்றிக் கொடிக்காகா மென்பூங் கொடிக்குருத்து
பற்றியவாட் டையிலாப் பார்வையாள் - மற்றவன்பால்
நெஞ்சுளிருந்தே குறிமைநர்மை யெலாங் கற்பனைபோல்
வஞ்சமுலை மேற்றேருன்ரு மார்பினள் - அஞ்சப்
பெடை போலடையிலாப் பெட்டை யிளவன்ன
மிடை போயவாலுறவ வென்பாள் - படைமதனை

ஊருங் கரியாக வோங்கிருளைக் கூந்தலென
வாரிமுடிக்க வருந்து வாள் - காரின்
ஒழிந்துமுளைக்கு மயிலொண் முருந்தை யொப்ப
விழுந்து முளைத்திடு வெண்பல்லாள் - தழைந்தொளிர்விண்
டாரகைவெண் மல்லிகைப்பூத் தான்பறித்துத் தாருமெனச்
சீரியதாய் மார்பாற் சிணுங்குவாள் - சீரியகண்
ணுடிமதியைப் பிடித்தென் னங்கையிற்றாந் தாயில்லை
யேடீ நிழற்பாவை யென்றழுவாள் - வேடன்
௨௯0. விதிரசத்தைக் காணாத மென்கனிவாய் முத்த
மதிரசத்தை யீயு மனைக்கீவாள் - சிதரிசேர்
கண்ணென்று பார்க்கவிரு கையொன்று செய்யமொழிப்
பண்ணென்று பேசும் பருவந்தாள் - விண்ணென்று
மின்னற் சிறுகொடிபோல் மேனியாள் பாலொழுகுங்
கன்னற் குதலைக் கனிவாயாள் - வின்னுதலாள்
பூமேல் நடந்தறியாப் பொற்பதத்தா ளன்னையர்சொல்
நாமேல் நடக்கும் நடையினாள் - மாமாயக்
கள்ள மறியாக் கருத்தினாள் காமசார
மெள்ளவும் பாயா வியல்பினாள் - எள்ளா
தடிக்கடி சிற்றாடை யவிழ்ந் தவிழ்ந்து வீழ
வெடுத்தெடுத்துக் கையா லிறுகப் - பிடித்திரண்டு
காலிற் சதங்கை கலகலெனக் கைவளைக
ளாலிக்கப் பேதையரோ டாங்கணுகி - நீலவரைச்
சாரலுறு நீலமணி தன்னாலடுப் பமைத்து
வேர லரிசிகரி வெண்கோட்டால் - போரறைமேற்
குற்றி யிளம்வேயின் கொழுங்கணுகும் பாளைசெறு
முற்றிநிறைய முகந்தெடுத்துப் - பற்றியிரு
கையாற் கொழித்துக் கரியுண் விளங்கனியின்
மெய்யாங் குழிசிநிறை வேய்த்தேனுட் - பெய்யா
௩00. வகிலின் விறகடுக்கி யங்காந்த காந்தண்
முகிழெனுஞ் செந்தீவளர மூட்டி - மிகவுமுதிர்
காய்க்குரவம் பாவைதனைக் கல்யாண மாப்பிள்ளையாய்
வாய்ப்புறவே வைத்து மலர்சூட்டிக் - தேய்த்தசெச்சை
பூசித்திரு மார்பிற் பொய்தன்மக ளிர்பலரு
நேசித்துச் சோபனங்க ணோரிருந்து - வாசித்துத்
தாலிகட்டும் வேளையிலே தன்னடை சிலம்பசைய
மாலைகட்டு நீபமலர் மார்பசைய - மாலளித்த
மாத ரிருவர் மருங்கசைய வாதபரைக்
காதுமணிக் குண்டலஞ்சேர் கா[illegible]

வாகுவலை யதடோள் வரையசைய நீலநிற
மாகு வலயங்காதில் வாய்ந்தசையச் - சேகின்
மருத்தணிகா சலத்தான் மன்னுசுனை வீறுந்
திருத்தணிகா சலத்தானை தேர்வந் - தொருப்படலுஞ்
செஞ்செவிலித் தாய்மார் திருமுன் பணிவித்தார்
தஞ்சுவலி னேற்றியெதிா தாமணைந்தா - ரெஞ்செவிலி
யாரென்று ளீத்தேரி னன்னமே செட்டியிவனா
பேரென்று ளப்பொழுதப் பேதையுந்தானே - சீரொன்று
செட்டியே யாமாகிற றின்னவவலோடு கன்னற்
கட்டிவாங்கிக் கொடென்று கண்டிசைந்தாள் - பட்டிவள்ளி

ஙக0. சைவளைய லேறறியிரு காலில வளைநதேற்றி
மைவளையு நெஞ்ச மயலேறறி - வெய்ய
விருட்டு விழியாமுன் னினைத்தவா காருமற்
றிருட்டு வியாபாரஞ் செயசெட்டி - வெருட்டியொரு
வேடுவனு யோர்புலவன் வெண்பாவைக கைக்கொண்டு
கோடு திரியுங் குறச்செட்டி - பாடாநற
கீரனைப் பூதத்தாற் கிரிகுகையுட் கறசிறைசெய
தோரரிய பாவை யுகந்தணைந்து - கீரனுக்கு
வீட்டுவழி காட்டியிடும் வேளாண்மை யாஞ்செட்டி
யாட்டிலுவந் தேறுமனைன தானசெட்டி - யீட்டுபுகழ
தேவேந்திரன் மகளபாற் சிந்தைகூடி கொண்டசெட்டி
நாவேந்தர்க் கேயினப நல்குசெட்டி - பூவேந்திக்
கன்று பணிபவாதங காசுபறிக்குஞ் செட்டி
பண்டறுவ ரூட்டுதன பாலசெட்டி - தொண்டர்
மதுரையிற் சொக்கப்பசெட்டி மைந்த னிளஞ்செட்டி
குதிரை மயிலாங் குமரசெட்டி - சதிருடனே
சீவபர வைகக்கியஞ் செய்திடுகந் தப்பசெட்டி
மூவா வனைக்கு முருகப்பசெட்டி - பாவனைக்கும்
அப்பாலுக கப்பாலா மாறுமுக செட்டியிவன
தப்பாமற கண்டாலுன றன்னைவிடானே - இப்போதெம்

ஙஉ0. வீட்டி லவலவெவலமை யேணை துணைடு வாவெனச்சீ
ராட்டி யனேமா ரகமபுகுர்தாா - பூடடியவில்
நாணை யறுத்துமத னைறசரும்பைர தன்னுருப்போற்
காணத் தெரியாமற காப்புறுத்தானை - பூணவனறோ
அவவீதி நீங்கி யடுத்த தையல்வீதி
யியவீ திபிலோ ரெழிற்சிறாமி - யவ்வீதி

## பெதும்பைப் பருவம்.

பேதைக்கு மூத்தாள் பெதும்பைப் பருவத்தாள்
காதைப் பொருவுங் கயல்விழியாள் - மீதுவரும்
மங்கைக் கிளையாள் மலர்மா தெழிற்கிளையாள்
செங்கைக் கிளையாள் செழுங்கிளையாள் - இங்கிதங்கள்
பேச மொழியாள் பிரசமணந் தாதுபொதி
வாச முகையின் வளமொழியாள் - ஊசற்
குதம்பை யணியுங்காதாள் கோலமுறு நீங்காதாள்
நிதம்ப மணியு நெடுங்காதாள் - இதம்பெருகு
சாமக் கலவிகலங் காரிகையார் பேசுதொறுஞ்
சேமச் செவிநிறையத் தேக்கிடுவாள் - பூமுடிக்க
வெட்டா மயிரோ டெதிர்ப்பைக் கவரிமயிர்
கட்டா முடித்த கருங்குழலாள் - கட்டிளைஞர்
திட்டிப்பார் வைக்கணிக்குட் சிக்கினருஞ் சிக்காது
மெட்டிப்பார்க் கற்றிலதே லேய்ந்ததெனக் - கொட்டைப்பாக்
ஙஙo. கென்னமத னுடைதருங்கு தென்னவிணைக் கோங்கரும்பீ
தென்ன வுரந்தோன்று மிளமுலையாள் - அன்னையர்கள்
கற்றுக் கொடுத்தன்றிக் கற்பனையொன்றுந் தெரியா
ளொற்றுக்குஞ் சற்றோநா ணெய்துவாள் - பொற்றொடியீர்
பூவம்பு வாட்டுவது பொய்யோ மெய்யோவென்பாள்
மாவம்பு கொண்டமுலை வம்பணிவாள் - நாவம்பு
பண்ணுமிளங் காளையர்கள் பார்வையளி யிதழ்த்தேன்
றுன்னுதாம் பார்க்குந் துவாவாயாள் - வன்னக்
குயிலொடுமா றுகவெதிர் கூவுவாள் சாரல்
மயிலொடு மாறுயநடிக்கு மாண்பாள் - பயிலும்
வன்னத்தைப் போல்நடத்தற் காதரிப்பா ளன்னையர்கள்
சொன்னத்தைப் பைங்கிளிகருச் சொல்லுவாள் - சொன்னமணிக்
குன்றத்தி லேறுங் குலமயில்போற் செம்பொனிற்செய
குன்றத்தி லேறிக் குயிற்றுமணி - மன்றத்தில்
வந்திருந்து பூவையர்கள் வாரிதி சூழுந்தீவிற்
தந்தமணிக் கழங்கேழ் தந்திடலு - முந்தியவள்
ஒன்றென்று நாளு முலகோர் வினைதீர்க்க
நன்று வருந்தி நதிபாடி - யென்றும்
இரண்டென்று வ ிதெய்வ யானைமணஞ் செய்யுந்
திரண்டவிழா விரண்டுஞ் செப்பி - தெருண்டவர்சொல்
கசo. மூன்றென்று நாடோறு முப்போது முப்போது
தோன்றுமணி நீலமலர் சொல்லியபின் - தேனறுநம்ப

நான்கென்று வானவர்கள் நாளும் வலம்புரியு
நான்கு பிரகாரவியல் நன்கியம்பிக் - கான்குலவு
மைந்தென்று வீராட்ட காசன் றிருமுகங்க
ளைந்து நிலையு மறிந்தியம்பிச் - சந்ததமும்
ஆறொன் றனுதினமு மன்பர்செபஞ் செய்துகரை
யேறு மெழுத்தாறு மினிதுரைத்துக் - கூறரிய
வேழென்று சத்த விருடிக ளுண்டாக்கியிடு
மேழுசுனை யி னெழி லியம்பித் - தாழுங்
குழலாடக் கைவளைகள் கூடவிரைந் தாடக்
கழலாடிப் பாடியிடுங் காலை - யழலாடி
மைந்தனந்த னிந்தனந்தன் வந்தனஞ் செயுஞ்சுகந்தன்
தந்தனந்த முந்தெரிந்த சந்தனந்தன் - கந்தன்
அரிகூடச் சாரலுறு மானையுங் கொச்சிக்குந்
திரிகூடச் சாரலுறுந் தேவன் - வரிகூடு
மிந்தீ வரத்தா னிருந்தீ வரத்தார்க்கு
வந்தீ வரத்தான் வரத்தான்றோ - முந்தோடித்
தெண்டனிட்டா ளண்ணல் திருவழ கெலாம்பார்த்தாள்
மண்டனிட்டா பாவ மயலகற்றும் - புண்டரிகக்
கசு0. கைக்கிளியைப் பார்த்துவெகு காதலுட னன்னைமீர்
இக்கிளியைத் தாரு மெனக்கென்றாள் - அக்கிளிதான்
வில்லிபுத்தூ ரான்செவியின் மேலிரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண் - பல்லவையுண்
மற்றொருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்ததுகாண் - வெற்றிப்
பிரபுட தேவக்குரிசில் பேணி யெதிர்காண
முருகன் மயில்மேல் முடுகி - வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றுந்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகாண் - எந்தைபிரான்
முத்தித் திருவென்னு முன்பதினா றாயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண் - சித்தியெட்டுங்
கற்றதுகா ணந்தம்மைக் கண்ணாலும் பாராம
லுற்றதுகாண் சிற்றின்பத் தோருறவு - மற்றதுகாண்
நாமுரைக்கும் வார்த்தைகளை நற்செவி கேளாதிருக்கும்
ஓமுரைக்கும் பூதியுங்கண் டுற்றிருக்குந் - தோமுரைக்கு
மற்றைக் கிளிபோல் வசப்படா தென்றுரைத்துப்
பற்றிக் கொடுபோனார் பாவைதனைக் - கொற்றவனுங்
கண்டு முறுவலித்தாற் போலக் கதிர்த்தேரைத்
தண்டிற் செலுத்தினார் சம்பரனைப் - பண்டுவலி

௩௬௦. சாய்த்த மதவேளுந் தன்கிளித்தே ரைத்தூண்டிக்
கோத்தமல ரேவாமற் கொண்டணைந்தான் - மீத்தெருவில்

## மங்கைப் பருவம்.

மற்றொருத்தி மங்கை வயதுபதி னொன்றுடையாள்
கற்றொருத்திக் கோதுங் கலைபுணர்ந்தா - ளுற்றிளைஞர்
நோக்குங் குறிப்புணர்ந்து நோய்கொண் டலையவெதிர்
தாக்கும் விடப்பார்வை தானறிந்தாள் - வீக்கியிடும்
வீணை யவசுரமாய் விட்டு நலிந்ததென்றுங்
கோணைமலைத் தேன்புளிப்புக் கொண்டதென்றுங் - காணுங்
கனியி னிரதங் கலக்க முறுமென்று
மினியமுதம் பால்விளர்த்த தென்றும் - பனியிரதக்
கன்னலுங் கோதாமென்றுங் கற்றவர்க ளிம்மங்கைச்
சொன்னல மொப்பில்லையெனுஞ் சொல்லுடையாள் - வன்னவிதழ்க்
கோவைக் கனியாயங் கொள்ளா திருப்பதிந்தப்
பூவைக் கனியாயம் போலுமெனச் - சேவைசெயுங்
காமா துரகரெலாங் கட்டுரைக்குஞ் செவ்வதரப்
பூமாதுர கபடம் போனிதம்ப - மாமாது
மட்டிற் சிறந்த மலருமிளை ஞோருயிருங்
கட்டிச் செருகுங் கருங்குழலாள் - வெட்டியெறி
வட்டுக் குவமைதனை மாற்றிவளர் தாமரையின்
மொட்டுக்கு நேரா முலையினாள் - கொட்டுதுடி
௩௭௦. மின்னம் பிடியெனவே மேவுகொடி மெல்லிடையா
ளன்னம் பிடியெனவே யாநடையாள் - கன்னியர்க்காம்
நாணு மடமுமன்னை நல்குபயிர்ப் பச்சமும்போற்
பூணு மகலாமற் பூண்டிருப்பாள் - வாணிலவைக்
கட்டிப் பிடித்ததுபோற் கையில் மணிப்பந்தை
முட்டிப் பிடித்திளைஞர் மொய்த்துவர - மட்டவிழ்பூஞ்
சந்தனப்பூங் காவகத்திற் றாயத் துடனேகித்
தந்தனத்தைத் தாங்குமிடை தள்ளாட - வந்தனங்கள்
கண்டு வெருண்டோடக் காரளகஞ் சோர்ந்துமலர்
வண்டு கழங்கின் மகிழ்ந்தாடத் தண்டரள
முத்து வடமாட முன்கை வளையாட
நத்துவட பத்திரமு நன்காடத் - தத்துநுதல்
வேராட மையெழுது மென்கழுநீ ராடவள்ளைச்
சீராடு குண்டலங்கள் சேர்ந்தாடத் - தாராடத்
தண்டை சிலம்பு சதங்கை புலம்பியிடப்
புண்டாரம் விண்டு புறம்புக - வொண்டளிர்

ஆக மசைந்திட வார மழிந்திட
மேகலை யம்புவி மீதுற - வேகிய
முந்தடி கொண்டு முடுக்கி விடுத்தெதிர்
பிந்தடி கொண்டு பிடித்தெறிந்து - பந்தடிக்கத்
௩௮0. தோழிமார்கண்டு துணுக்கென் றெழுந்திருந்து
வாழி மடவனமே மாமயிலே - யேழையே
கொங்கைக் குழும்பகையைக் கொண்டாய் கரத்ததுநின்
சிங்கவிடைக் கிடுக்கண் செய்யாதோ - தங்கியநின்
பல்லுக்குத் தோற்றமுத்தின் பந்தைப் பிடித்தடித்தால்
வல்லுக்குத் தோற்றவிடை வாடாதோ - செல்லைநிகர்
கொண்டைக்குத் தோற்ற கொடும்பந்தை நீயடித்தால்
அண்ட நகைவையகு ராக்காதோ - வொண்டொடிநின்
மென்குதிக்குத் தோற்று விளங்குமணிப் பந்தடித்தான்
மின்குதிக்கு நுண்ணிடையை வீட்டாதோ - நன்குதிக்கும்
பொன்னே யமையுமெனும் போதிலொரு மானளித்த
மின்னேயம் பூண்டவடி வேலனார் - நன்னேய
மூலாத் திரியாய் முதிர்நல்ல காத்திரியார்
மாலாத் திரியார் மனத்திரியார் - நீல
மயில்வா கனத்தார் மலர்வாணி கொங்கை
பயில்வா கனத்தார் பணியுஞ் - சயிலேசர்
மாலைக்கடம் பணிவார் வள்ளியிரு தாமரைப்பூங்
காலைக்கடம் பணிவார் காங்கேயர் சால
வெறியாட்டி லேறும் விருப்புடையார் வீர
மறியாட்டி லேறிவருவார் - குறிகாட்டும்
௩௯0. வெற்றிமணித் தேர்மேன் மேவுதலும் பூங்கரத்திற்
பற்றுமணிப் பந்தெறிந்து பாங்கியருஞ் - சுற்றிவரச்
சென்றா ளெதிரேகித் தெண்டனிட்டா ளாங்கெழுந்து
நின்றாள் திருவுருவை நேர்பட்டாள் ஒன்றாச்
சமயமொரு மூவிரண்டுந் தந்த நெறிநிற்க
வமையமுக தாமரையோ ராறும் - நமதுயிர்சூழ்
பன்னிரண்டு வேதனையும் பாற்றுமருட் பார்வைதரும்
பன்னிரண்டு செய்யவிழிப் பங்கயமுஞ் - சொன்னிறைந்த
அன்புதருஞ் சாத்திரங்க ளாறுமறை யவர்க்கு
முன்புகலுஞ் செங்கமல மூவிரண்டும் - மன்பதைகட்
கேயிதங்கள் செய்யா விருளரக்கரைத் துணித்த
வாயுதங்க ளேந்து கஞ்ச மாறிரண்டு - மாயுதத்தாற்
சிந்தித் தவுணர்தமைச் செற்ற சினக்கனல்சே
ருந்திக் கமலமெனு மோர்மலரும் - கந்திக்குஞ்

சீர்பூத்த வேடச் சிறுமிவளருங் குறிச்சி
யூர்பூத்த புண்டரிக மோரிரண்டும் - பாரா
முருக னிளமை முருகுண்டான் கஞ்சம்
வெருவமத னெஞ்சழுத்தி விட்டான் - பரவசமாய்
மெய்ம்மறந்து சோர்ந்து விழுந்தா ணிலமீது
பொய்ம்மறந்த தாய்மார் புகலுவார் - கைமறந்து
சoo. வள்ளியிரு தாள்பணிந்த மாய மறியேமோ
நள்ளி மகவானளித்த நாரிதனை - யுள்ளி
யரக்கரொடும் போர்செய் தலுத்தறி யோமோ
யிரக்கமிலா தேயறங்க ளெல்லாங் - கரக்குமது
சூதன் மருகனென்று சொல்வதறி வோம்பரவை
தூதன் மகனென்று துணிந்திடுவோம் - காதற்
றிருப்பழனி வெற்பதனிற் சேர்ந்துகொண்டு ஞாலந்
திருக்குமிள மங்கையரை யெல்லாம் - விருப்புடன்
போதச் சிறையெடுத்தல் போதாம லெங்களிள
மாதைச் சிறையெடுக்க வந்தீரோ - சூதா
யிகலிஞோர் பொன்னை யிரவிலிட்டார் கன்னம்
பகலிலே கன்னமிடல் பாங்கோ - புகலரிய
காமமுனை தோன்றுவெங் காதலிக்கு நீர்வந்திங்
கேமமயல் விளைத்திட் டேகுவீர் - சேமமுறும்
தேரை நிறுத்தீர் செழுங்கடைக்கண் வைத்தவட
னேரை நிறுத்தீ ரெனுமளவில் - நாரியரைப்
பாரா தவர்போலப் பார்த்துப் பசும்புரவித்
தேரா தவர்போற் றெருவகன்றார் பாரீது
தன்காலால் வந்தமங்கை தாய்காலாற் சென்றுமனை
யின்கா லிலங்குமஞ்சத் தேகிடந்தாள் - தென்காலுஞ்
சசo. சந்தனத்தைப் பூசுமுலை தைவரனும் நெஞ்சழுங்கி
யிந்தனத்தை நீற்றுநெருப் பீதென்றாள் - வெந்தனத்திற்
பன்னீரை வார்க்குமிளம் பாங்கியரைப் பார்த்தையோ
வெந்நீரை யேனிறைத்தீர் மேலென்றாள் முந்நீர்
ஒலியுங் குயிலி னொலியு முயராம்
புலியும் புலியாம் புதுமை - யொலிவளையீர்
இன்றறிந்தே னென்றாள் என்றறிந்தீர் நீரென்றாள்
அன்றறிந்தாள் காமத் தருந்துயரம் - பின்றெருத்தி

## மடந்தைப் பருவம்.

வேத மொருமூன்றின் விளங்குமிடை வேதத்தி
னோதுகின்ற காண்டங்க ளோரேழின் - ஓதுநடுக்

காண்டமென வேழ்பருவக் காரிகையார் தம்முளெழின்
மாண்ட விடைப்பருவ மாமடந்தை - வேண்டியய
னிம்மடந்தை யைப்பார்த் தெழிலார் திலோத்தமையா
மம்மடந்தை தன்னையு முண்டாக்கினு - னிம்மடந்தை
பார்வைவலியான் மதனும் பங்கயன் முன்னும்புலவர்க்
கார்வமய னீங்கா தளித்திட்டான் - சீர்வடபாற்
பொன்மலை மேலூரும் புலனையய கூந்தலாள்
தென்மலைமே லூர்பிறைபோற் சேர்நுதலாள் - நன்மைதரும்
கல்லார வெற்பிலுறை கார்வேடர் கைப்பிடித்த
வில்லார் கரும்புருவ மென்கொடியாள் - சொல்லாரும்
௪உ0. இந்திர தீர்த்தத்தி லெழுநீலம் போல்விழியாள்
நந்தவனப் பூங்குமிழ்நேர் நாசியாள் - நந்திட
மடுவினலர் செவ்வாம்பல் வாயாள் பைஞ்சாரல்
படுகழையின் முத்தென வெண்பல்லாள் - இடபன்
சிவகங்கை தீர்த்தமுறுஞ் செந்தா மரைபோ
லவிர்கின்ற செய்ய வதனத்தாள் - தவநண்பின்
நாரதனுர் யாழிலெழு நல்லிசைய வெல்லிசையாள்
ஏரிபடர் வள்ளை யெழிற்காதாள் - நீர்குலவும்
விண்டு சுனைத்தவழும் வெண்பணில மாங்கழுத்தாள்
மண்டியவேலன் செறுவின் வாழ்க்கைநேர் - தண்புயத்தாள்
தானேறி யெங்நாளுந் தண்ணீர்பா யேழ்சுனையின்
மாநேமிப் புள்ளின் வளர்முலையாள் - தேனுர்
வராகபுரத் தாலிலைமேல் மாயவன்போற் பண்டி
விராவுமயி ரொழுங்கார் மின்னுள் - பராவுங்
கடம்பவனத் திற்றிரியுங் காமருபின் பார்வை
மடங்க லனையவிடை வாய்ந்தாள் - விடங்குலவு
நாகர் சுனைக்கரைவாழ் நாகநிக ரல்குலாள்
நாகர்சுனைத் திரிகைந் நாகத்தின் - மோகத்
துதிக்கை நிகருந் தொடையாள் தமிழை
விதிக்குமுனிப் பூஞ்சுனைவீழ் ஞெண்டின் - மதிக்குமுழந்
௪௩0. தாளாள் சரவணத்தீர்த் தத்துவரா லென்னதுணைத்
தாளாணல் லான்குளத்துத் தண்ணீரின் - மேலாகுங்
கச்சபத்துக் கொப்பாகுங் கஞ்சமல ரடியாள்
வச்சபத்தி னுன்காய் வருமுலகை - யிச்சையிற்செய்
போதன் சுனையிற் பொருந்துமனம் போல்நடையாள்
நாதன் மயில்போலு நல்லியலாள் - மாதரொடு
மேனிலா முற்றத்து வீற்றிருப்ப வோரணங்கு
பானிலாக் கண்ணுடி பாரென்றுள் - வேனிலான்

வின்னூரி யோர்பால் நெகிழ்த்தி விடுத்ததெனப்
பின்னூ ரிருங்கூந்தல் பின்னியொரு - நன்னூரி
மாலைபுனைந்து மருங்கில்விலை யில்லாப்பொற்
சேலை புனைந்து திருநுதலின் - மேலை
மதிக்குமறு வெண்டிந்த மாதினெழில் கண்டோர்
மதிக்குமறு வுண்டெனுஞ்சொல் வாய்ப்பத் - துதிக்குமெழிற்
கத்தூரிப் பொட்டணிந்து கண்ணில்விட முட்டுதல்போல்
மைத்தூரி கைக்கோலல் மையெழுதி - முத்தாரும்
மூக்கணியுங் காதணியு முன்கைவளையுங் கழுத்திற்
றேக்கணியு மாரச் செறிவித்துத் - தாக்கும்
புகர்முகங்கொள் யானையெனப் பொற்சுணங்கு பூத்துத்
திகழ்முலையி னிற்களபஞ் சேர்த்திப் - புகழுமதன்
௪௮௦. கையிற் கயலுங் கரும்புஞ் சாமையுந்துந்
தொய்யிற இசையத் தொகுத்தெழுதி - மையிடையிற்
காஞ்சி பருமம் கலாபம் விரிசிகைகாற்
பூஞ்சிலம்பு மார்ப்பப் புனைந்துதொழ - வாஞ்சையுடன்
தன்னழகைக் கண்டு தருக்கி மனமகிழ்ந்து
மின்னனையா ரோடெழுந்து வெற்பிவர்ந்து - சொன்னமதில்
மேல்வீதியிற் குணபால் வீறுமணி வாயிலைத்தென்
கால்வீதி யீதென்று கண்டுவந்து - நால்வீதி
சூழுஞ் சரவணத்தின் றூய்நீரைப் பார்த்தடியார்
வாழுமடங்கள் வளம்பார்த்துத் - தாழ்மயின்மா
வையாளி மேட்டின் வளம்பார்த்து வீரட்டத்
தையா னனன்வா முகம்பார்த்துப் - பொய்யாத
ஓங்காரத் துண்மை புகைக்குஞ்சாமி நாதனென்று
நீங்காதமரு நிலைபார்த்துப் - பாங்காரும்
மால்வீர ராகவனூர் வண்டளிபுய பார்த்துவிழிச்
சேல்வீர காளிநிலை சேவித்து - நூல்வாய்ந்த
தென்கோ புரவாயிற் சென்றுமலர் மாதின்
மன்பேர் குலவும் வரைபார்த்து - முன்பாகும்
நீலச்சுனையி னிலவி யெழும் பைங்குவளைக்
கோலமதைப் பார்த்துக் கும்பிட்டு - வேலர்திருக்
௪௯௦. கல்யாண மண்டபமுங் கண்டுபெற வாகனங்கள்
செல்யாணர் மண்டபத்தைச் சேவித்து - வெல்யானைக்
காவேரி ராசன் கனகமணி மாளிகையின்
பாவேரியல்பனைத்தும் பார்த்ததன்பின் - பூவேரி
மனாறும் குடவாயில் வந்திருந்து செங்கழுநீர்
துன்னுங் கரிமுகனைச் சூழ்ந்திறைஞ்சிப் - பன்னலஞ்சேர்

விண்டு சுனைபார்த்து வெய்யமணி நாகசுனை
கண்டுசித்தர் வாழ்குகையுங் கண்டெழுந்து - வண்டுலவும்
நாரதநீர்த் தம்பார்த்து நன்மலயக் கும்பமுனிச்
சீரணவு தீர்த்தந் தெரிசித்துச் - சாரலுறும்
வேடுபறி மண்டபத்தின் விம்பித மெலாம்பார்த்துக்
கோடுசெறி நல்லான் குளம்பார்த்து - நீடும்
வடகோ புரவாயில் வந்தணுகி ஞாலம்
படையோதி மஞ்சிகரி பார்த்துப் - புடைசூழுந்
தத்துவ சாரமெனச் சாற்று நதிபார்த்து
மத்தூர்ச் சிலையின் வளம்பார்த்துச் - சுத்த
வகத்தியனோ டாண்டுதவ மாற்று மிடம்பார்த்து
மகத்துவஞ்சே ராலயத்துண் மன்னி - யிகப்பில்
ஒருஞான சத்திர னுற்றவிடம் பார்த்துத்
திருஞான தீட்சையெனச் சேரும் - இருமாதர்
சகூ0. கோவில் வளம்பார்த்துக் குமாரலிங்கம் பார்த்தெவர்க்குங்
காவலெனு மாபத் சகாயனுறங் - கோவிலையுங்
கண்டுநவ வீரருறங் கற்றளியும் பார்த்துவளங்
கொண்டுகொடிக் கம்பநிலைக் குஞ்சரமுங் - கண்டுவந்து
நன்றே யிருந்ததிந்த நன்மலையென் றுமொழிந்தே
தன்றுயரு மீணக்கு சாற்றவார் - முன்றேவர்
கோமான் றவஞ்செய்த கொற்றமலை யிதனைச்
நாமா வுரைக்கவெடு நாள்வேண்டும் - பூமானே
யீசன் றவம்புரிந்த திவ்வரைச்சீர் முல்லமறு
காசிமுதற் சேதுவரை கண்டதுண்டோ - வாச
மலரோன் சிறைதவிர்த்து வாழ்வு பெற்றதிந்த
மலையே யலாது மலையுண்டோ - நிலைநீது
சூரன் கொடுபோகு நாள்வள மெலாங்கொடுத்த
வீரன் சினந்தவிர்ந்த வெற்பிதுவே - மாரனுக்குத்
தந்தை தவம்புரிந்து தத்துவத்தை நன்கறிந்த
இந்தமலை யல்லாமற் றெங்கனுண்டு - சிந்தனைசெய்
சத்த முனிவர் தவம்புரிந்து மேலான
நித்தியத்தைப் பெற்றதுநிந் நீள்வரையே - பத்தியுடன்
கும்பமுனி வேலோனைக் கும்பிட்டுச் செந்தமிழைக
கம்பமறக் கற்றதுமிக் கல்லகமே - வம்புபெறு
சஎ0. செங்கழுநீர் முப்போதுஞ் சேர்சால் கலியுகத்தி
லிங்கழகாய்ப் பூப்பதுவு மிம்மலையே - மங்கைக்
குறத்திதவ முன்புரிந்த கொள்கையினுற் சேயில்
லறத்தினியல் வாய்ந்த திதுவன்றே - புறத்தெவர்க்கும்

வேட்ட மாமகிழ்த்து வெய்ய பிணியிலொத்து
மோட்டுமலை யிதென் றுரைப்பளவில் - கூட்டும்
பிறவிக் கினியான் பெயரா தருள்வான்
றுறவிக் கினியான் றொலையான் - இறைவி
மலையா டருமைந்தன் வாழ்வுதரு மைந்தன்
மலையா டருமைந்தன் மன்றுந் - தலைமேயு
மீசனையன் யாற்கருளா வெண்ணணித் தணிகைமலை
வாசனையன் மாற்கருள மன்னிருளன் - மோசக்
கிரவுஞ்ச மங்கழித்தான் கேடிலசுரர்
விரவுஞ்ச மங்கழித்தான் விண்ணோரய் - இரதமிசை
வந்தா னெதிர்ப்பாய் மடக்கதை பணிந்தெழுந்தாள்
செந்தா மரைமீசர் திருமுகமுங் - கொந்தாரு
மாலைக் கடம்பணியு மார்பும் வரைத்தோளும்
சேலைப் பொருவிழியாற் சேவித்தாள் - கோலமுறுங்
கங்கணையி னொரியன் கை யானைமுலை மேற்பாயுந்
திங்களெனை வேவச் செய்கிட்டாள் - தங்கும்
௪௮0. மடநாண மச்சமருவும் பயிர்ப்பு
முடனேக வாசைமோ யுற்றாள் - இடமாகப்
புள்ளிருக்கும் வேளூர்ப் புரக்கும் வைத்தியருக்
குள்ளிருக்கு முத்துக் குமாரரே - யெள்ளிருக்கும்
என்னெனையைப்போ லெங்கு மிருப்பவரே காமசுரம்
வெண்ணெயைப் போலேயுருக்கி விட்டதுகாண் - பண்ணுறும்
பரிகாரஞ் செய்யீர் பசுபுண்ணினில் மார
னெரிகார மிட்டதுபோ லெய்தான் - சரமாரி
கைதொட்டுப் பார்த்திடீர் கண்ணுறல் முகம்பாரீர்
மெய்தொட்டுப் பார்த்திடீர் வீணோமோ - வைதொரு
டொருமாத் திரைதா னுரையீர் கனிவாய்
தருமாத் திரைத்தேனுந் தாரீர் - பொருமாற்றல்
தென்காற்றுச் சங்கையுட னீண்டி யலைக்குமிதை
நன்காற்றும் பூதி நயந்திடீர் - பின்காலும்
பூரணசந் திரோதயத்தாற் பொங்கு முடல்விளர்ப்பைச்
சீரணயு லேகியத்தாற் றீர்த்திடீர் - கூர்மயலாய்
தீர்ந்தால் வெகுமதிகள் செய்குவன்செவ் வாயமுத
மார்ந்தாலெம் பொற்குடமும் மங்கையதே - சேர்ந்து
படிக்கப் பொருந்திடுவல் பாரு மதனாருக்
கொடுக்கத் தகுமென்று கூற - வடுக்கற்
௪௯0. பெருமான் றலையசைக்கும் பெற்றிபோற் றேர்மேல்
திருமான் மகளிரொடுஞ் சென்றான் - ஒருமான்

பயந்தாள் விழுந்தாள் பதைத்தா ளுயிர்த்தாள்
அயர்ந்தா ளனைமா ரறிந்து - வியந்துரைப்பார்
முந்நீரின் முத்தளித்த மொய்குழற்குக் கைம்மாறு
வெந்நீ ரளித்ததென்ன வேலவரே - பன்னீரோ
பெண்ணுக்குப் பேயும் பெரிது மிரங்குமென்றன்
கண்ணுக்கெம் பூவை கசப்பாச்சே - நண்ணும்
வயித்தியனார் மைந்தரென்று வந்துடைந்தாற் பின்னும்
பயித்தியமே செய்வதுதான் பண்போ - சயித்தியந்தீர்
அக்கினி குமாரகந்தா வன்பினிற்கூ டென்பாளுக்
கிக்கினி குமாரகந்தை யேன்புரிந்தீர் - திக்குமகிழ்
பைங்கழுநீ ரோடையொன்று பற்றுமவெம் மடந்தை
யிங்கழுநீ ரோடைகளா யிட்டீரே - செங்கழுநீ
ராங்குவளை வெற்பென்ப தல்லா லிவள்காத்தி
னீங்குவளை வெற்பாக்கி நின்றீரே - யோங்கியண்டந்
தாமயிலின் றேகைத் தனிநிறம்போல் யாட்பயந்த
மாமயிலையுங் கருக வைத்தீரே - பூமிசனிற்
காஞ்சியணி பாவடியைக் கண்டு ரிவளிடைவீழ்
காஞ்சியணி மாவடியுங் கண்டீரே - பூஞ்சிகைசேர்
ருo). மாவொழி மாமுகன்பால் வாங்கிலீ ரிங்கிவடன்
காலாழி வாங்குங் கருத்தாவீர் - பாலாழி
யன்ன புகழ்படைத்தீ ராகாது பெண்டழியிங்
கென்னவுரைத் தேகினீ ரிம்மடந்தை - தன்னகத்திற்
சற்றே துயின்று தனித்தெழுந்து தோழியரை
யுற்றே முகம்பார்த் துரைக்கிடுவாள் - பொற்றொடியீர்
என்கனவி லேயொருவ ரெய்தினா ரங்கவரைப்
புண்கணகற் றீரென்று போற்றினைத்தேன் - நன்கவருஞ்
சந்திர மண்டலத்திற் றவியகோ வைக்கனியும
மந்தார தாமரையு மல்லாமற் - சுந்தரஞ்சேர்
வாழை யிரண்டடியில் வைத்திடுசெந் தேன்கூடு
மாழைமொழி யாயுதவ வல்லையேல் - ஏழையுன்றன்
மையறோய் தீரும் வகைபுணர்ப்ப னென்றுரைத்தார்
ஐயனல்லீ ரக்கணமே நான்விழித்தேன் - ஐயமறச்
செப்பீரிதன்பொருளைச் சிந்தை தெரிந்தெனது
மப்பேதைய ரதனை யாராய்ந்து - தப்பாமல்
ஓதுவார் வாயிதழு கொண்முலையு மல்குலுமே
காதுசேர் தாழ்குழையாய் காணென்றார் - தாதுசேர்
செச்சைக் கணியாருஞ் சேர்ந்துன்னைக் கூடியபி
மிச்சைக் கணியாக வெய்திடுவார் - நிச்சயமே

௫௧0. தேறி யிருத்தியெனச் செப்பினா ளங்கவளு
மாறியிருந்தா ளருந்துயரம் - வேறொருத்தி

## அரிவைப் பருவம்.

காரரிவை குந்தலத்துங் கட்செவிவை குந்தலத்து
மோரரிவை குந்தலத்து மொப்பிலாச் - சீரரிவை
யுண்டால் மயக்க முறுமதுப்போ லாதிளைஞர்
கண்டால் மயக்குங் கனிநறவம் - விண்டோய்
இடையாலும் யாழி னிசையாலு மன்ன
நடையாலும் பார்வை நயனக் - கடையாலும்
புன்முறுவ லாலும் பொருவே லிளைஞருயிர்
வன்மைசவ வருங்கூற்றம் - வின்மைபெறுங்
காமன் கலைக்குக் கனிந்த வலங்காரஞ்
சேம வனிதையர்க்கோர் சிங்காரம் - தாமக்
கருங்குழலாள் சொற்குழலாள் காமத்தால் மாந்தர்
மருங்குழலாள் பாங்கியொடு மன்றல் - நறும்பொழில்வாய்
புக்காள்வெண் பற்கிணையாம் பூமுல்லை யைக் களைந்து
மைக்கா ரளகத்தின் மாட்டினாள் - மெய்க்காகாப்
பிண்டித் தளிர்பறித்துப் பெய்தாள் புவிமீது
மண்டி மிதித்தாள் மலர்ப்பதத்தால் - கெண்டை விழிக்
கொவ்வாத மாவடுவை யொண்கரத்தி னாற்பறித்துக்
கவ்வாக் கறியாக் கனிந்துமிழ்ந்தாள் - செவ்வான
௫௨0. நாசிக் கிணையாகா நற்சண் பகமலரை
வீசுங் குழைக்காதின் மேல்வைத்தாள் - நேசித்த
செங்கரத்துக் கொவ்வாத செங்காந்தளைப் பிடுங்கி
யங்காற்றும பாப்பெனநீன் ருட்டினாள் - கொங்கைக்குத்
தோற்ற விளநீரைத் தொட்டுப் பறித்துடைத்துச்
சீற்றமறக் குடித்துத் தேக்கெறிந்தாள் - தாற்றிணிளம்
வாசக் கமுகை வளைத்தேறு மாதவியி
னூசற் கொடிமே லுவந்தேறி - வீசுங்
கலாப மயில்போலக் காலி னுதைந்தாடிக்
குலாவும் பொழுதிலன்பு கொண்டோர்க் - கெலாமுதவுஞ்
சிந்தா மணியாஞ் சிலப்பதிகாரம் படைத்தான்
கந்தா மணிமே கலைபுனைந்தான் - நந்தா
வளையா புரிதருவான் வாசவனுக் கீந்தான்
றிளையாத குண்டல கேசிக்கும் - வளையாழி
நீருண்டான் காத னிகழு மகத்தியத்தா
னேருண்ட தொல்காப் பியமுவந்தான் - சீருண்ட

சிற்றதி காரங்களெலாந் தேவர் முதலாக
வுற்றவதி காரிகளுக் கோர்ந்தளித்தான் - முற்றுலகாள்
பேரதிகா ரந்தனைத்தான் பேணுந் திருத்தணிகை
யூரதிகா ரன்றோர்வந் துற்றிடலுங் - காரிகையும்
௫௩௦. நன்னா விடையைய நண்ணிப் பணிந்தெழுந்து
முன்னா லுரையகல வோதினாள் - பன்னாளும்
யோதா துணரு முயர்புலவீர் மெய்யி னுயிர்
போதா திருக்கப் புணர்ப்ப தன்றோ - தாதாரும்
ஆய்தங் குறுகி யனைத்தா நிலையினுடல்
தேய்ந்த தென்னிதியா செப்பீர் - வாய்த்தமிழ்ச்சேர்ந்
தேனு முயிரளவ யேய்ந்த வுடலளவும்
மாறியழிந்த வகையென்னே - கூறிவா
வல்லினத்து ளோரிரண்டு மற்றை மருங்கான
மெல்லினத்துக் கேபகையாய் விட்டதென்னே - புல்லொருசார்
அல்வழியும் வேற்றுமையே யாகி நடுமருட்டுஞ்
சொல்வழி வாராதவென்ன சூட்டீரோ - நல்ல
வியற்கைக் குயின்மொழிதா னென்னே மிகுத்த
செயற்கைக் கொழிபவனைச் செப்பீர் - பயிற்சிபெரு
நேமிநாதக்கா ளிலேமெதரியார் சொற்புணர்ச்சி
காயன்மன்னூற் றுத்திரத்தாற் காட்டினீர் - சேமமுறு
செவ்வேழ மெய்க்குமுனைஞ் சேர்ந்த தடவாமென்கை
பொவ்வா வியல்பென்கை யோதினா - தவ்வாத
நானிலத்து ளாஞ்சினையா நண்ணிய பூவமபாலை
தானடுத்துச் செய்மயக்கந் தானறைப்பீர் - வானடுத்துச்
௫௪௦. சீறுபொழு தைந்துந் திவசந் தொறும்புணரு
மாறுபொழு தாக்கிலவகை யாயிடுமோ - கூறுகிலீர்
என்று வினவினு மொன்றும் விநாயனோர்
முன்றவி வந்த முருகேசர் - நன்றாயி
பூசுந் திருமேனிப் பூசின் மணமலர்மேல்
வீசியுரை வீசாமல் மேலகன்றார் - தேசிகராய்த்
தாதைக்குத் தொன்றா தனிப்பொருள் சொற்றரிந்தப்
பேதைக்குச் சின்றவலைப் பேசுவரோ - சோதிந்
தருவமத னெய்யு மசோக மலராக
மிருவமதனை கவலை யுற்றான் - தெரிவை

## தெரிவைப் பருவம்.

அவனொருத்தி வேளுக் கடங்காப் படையாந்
தவளை யனைதந்த டேந்து சமர்த்தி - நவமிரா

மடிப்பின் படிவாய்ந்து வாமத்தாம் பார்கைக்
கடிக்கொள் வரான்மேவு கணைக்காலும் - படைத்துச்
சிலம்படியின் மன்னியன்பர் சிந்தைகுடி கொண்டு
நலம்படரும் பேரின்ப நல்கி - யிலங்குமெழிற்
சிற்பநூ லொத்தொழுங்கிற் சேருமிந்திர நீலமணிப்
பொற்பு மலங்காரப் பூமணமு - மற்புதமுந்
தன்னே ரிலாதசர வணதீர்த்த மொன்று
நன்னீர்த் தணிகையிலே நண்ணியிடு - மன்னிரிற்
சங்க மிடறொலிப்பச் சக்கரவாகங் குழையப்
பைங்கழுநீர் செங்கழுநீர்ப் பண்புபெறத் - துங்கவிதழ்ச்
ருஎ௦. செம்பவளம் வெண்டவளச் சீர்சால் நிறமெய்த
வம்பவிழும் சைவலந்தோள் வந்தசைய - கொம்பரிடை
வல்லி துவள மலர்க்கைக் குருகிரைப்ப
வல்குற் பைநாக மசைந்தாட - வில்லினுதல்
வோடக் காதில் விளங்கு குழையாட
நீராட வாதொழி நீயென்றாள் - சேரிழையே
சங்கைக்குண் முற்றேன்றுங் கந்தச் சரவணநீ
ரெங்கட் கியையா தியையுமுனக் - கங்கதனிற்
றோய்குதிநீ யென்றுரைப்பத் தோகா யெனதுகுறிப்
பாய்குதி நீதானென் றடர்காலைத் - தாய்குதிக்கும்
பச்சைமயிற் பரியான் பன்னாலுங் காண்பரியா
னச்சைப் பரியா னளப்பரியான் - பிச்சம்
புனைபொற் குடையான் புகழ்நிக் குடையான்
குனிவிற் குடையான் குடையான் - இனிய
கதிவா யவியான் கடம்பா டவியான்
றிதிவா யவியான் செவியான் - மதிவாய்ந்த
கானகத்தான் வள்ளிபுறங் கானகத்தான் வீணைமுனிக்
கானகத்தான் றென்றணிகைக் கானகத்தான் - வானகத்தான்
பொற்றேரைக் கண்டெதிர்போய்ப் பூவை தொழுதுகுகன்
முற்றேரைக் கண்ணான் முகந்துண்டாள் - கற்றோர்வாழ்
ருஅ௦. இந்திர நீலோற்பலமே யென்று யெனதுமுக
சந்திர நீலோற்பலம்போல் தான்கலுழ்வாய் - அந்திபகல்
மேனி கருகி விழிதுயிலாய் மன்மதன்போர்க்
கானிபடு மென்றனைப்போ லாயினும் - வேனிலுக்கும்
பங்கப் படுவாய் பகலு மலர்பூண்டாய்
திங்களைக்கண் டுபயத்தைச் சேர்கின்று - யங்கசனூர்
கொல்லும் படிநின்றாய் கூர்தென்ற லாற்குழைந்தாய்
புல்லி யகலப் பொலிவிழந்தாய் - கல்லெனவே

வீசமலேக் கலேந்தாய் மென்கொங்கை யார்திதலே
வாசம் புனேந்தாய் வளேமருவாய் - பாசமாய்
புணர்ந்தாயன மிறங்காய் பூந்தோட் டணியுந்
தணைந்தாய் தணந்தோர்த னிமை - புணர்ந்தாய்கொல்
கந்தவேளாகங் கலந்து மணந்தாய் தணந்தேன்
சிந்தைபோல் வாடுந் திறமுனக்கேன் - வந்தெனக்குச்
சொல்லா யெனவினவுந் தோகைமேற் - சித்தசனுங்
கல்லார மல்லாக் கணைதெறிந்தான் - கல்லாரஞ்
சோரரிவைமீது சொரிந்தார் மின்னு ரிளேயோன்
றேரகன் றதப்பாற் றெருவீதி பேரிளம்பெண்

# பேரிளம்பருவம்.

ஆணிலழகா மனக்கனேப்போற் பெண்ணிலெழில்
பூணிமதி ரூபப் பொற்கொடியாள் - காணும்
ருசு0. அணிகட் கழகிணேயுண் டாக்குமவை யவத்தாள்
மணிகட் கழகுகைை வாய்ந்தாள் - குணமிகுந்த
பூமகளேக் கூத்தாட்டும் பூவையர்கள் பூவாச
ஞமகட்குக் காவியங்க ளைன்குரைப்பாள் - காமருஞ்சு
சுந்தரிக்குமேலாந் துரைத்த லக்தாள் பூவானி
பைந்தொடிக்குங் காமரசப் பண்புரைப்பாள் - இந்திரவி
மீதெழுந்த குன்றனேத்தும் வெளாறு குறுமுனியாற்
பாதலத்தி லுற்ற பறப்பிணேயு - மீதலஞ்சேர்
வாசவனுர் கைக்கிசைந்த வச்சிரத்தைக் கண்டுதிரை
வீசுகடலிற் படிந்த வெற்பிணேயும் - காசினிக்கீ
ழும்ழுப் பொருதுவெலற் குந்திப் பிலவழியு
மற்றைவழி யாகிதமப ... டலும் - சற்றிறங்கிப்
பார்க்கத் தலேவணங்கும் பான்மை ... சாய்ந்துமணி
வார்க்கச் சறுத்த வனமுலேயாள் - கார்க்குவளே
யாடற் காங்காகு மம்பொன்முடித் தெற்றியிற்போய்த்
தேடற் கருமணிச் சிங்காதனத்திற் - சேடியர்கள்
முந்துதொழ வீற்றிருந்து முற்றுமுண ரோவியனேத்
தந்திடென வொருத்தி தந்திடலும் - வந்துதொழு
மோவியனேக் கண்டுகிழி யொன்றிலுல கீரேழின்
மேவு புயவலியின் மிக்கவராய் - மூவர்தொழும்
சு00. தேசிகராய்ப் பொன்னிறங்கொள் தேசினரா யுண்மைபுகல்
வாசகராய் நீங்காத வ விடராப் - யாசகர்க்கு

வீசுங் கொடையினராய் வெய்ய கலியுகத்திற்
பேசி வரங்கொடுக்கும் பெற்றியராய் - நேசந்
துறவா தவராய்த் துவிதவினை நோய்கொண்
டுறவா தவராகி யென்றும் - பிறவாத
நித்தியராய் நாற்பயனு நேரி லொருங்குதவுஞ்
சத்தியராய் மும்மலத்தின் சார்பிலரா - யித்தலத்திற்
பேரருட் கீர்த்திப் பிரதாப முள்ளவராய்ப்
போரரசர் கண்டுதொழும் பொற்பினரா - யாரொருவர்
உள்ளக் கருத்தறுமுண ருத்தமரா யுன்னுமன்பர்
கொள்ளக் கருணைபுரி கொற்றவராய் - வெள்ளமிலாச்
செல்வச் செருக்கினராய்ச் சீரொழுக்க முள்ளவராய்
கல்விக் கடல்கடந்த காவலராய்ச் - சொல்லுமனு
நீதி பொறுமை நிலைமை யறிவடக்க
மோதி மகிமைசால் புள்ளவராய்ச் - சோதித்து
யாருநிக ரில்லாவோ ராடவரை நீயெழுதி
நேருதியென் றுளவனு நேர்வணங்கிக் - கூறும்
அறிவாலுங் கல்வி யளவாலுஞ் சிறப்பச்
செறிவாலு மாராய்ந்து தேடி - மறியாகு
௯௧௦. மானின் மருமகன் வடிவனைத்துங் கண்டெழுதித்
தேனின் மொழியாள்கைச் செலுத்தளிப்பந் - தூநகையுங்
கண்டு மகிழ்ந்தென்றன் கருத்தின் படியெழுதிக்
கொண்டுவந்தா யென்றவனைக் கொண்டாடி - யொண்டொடியச்
சிற்பனுக்கு வேண்டுந் திரவியமும் பொற்றுகிலும்
பொற்பணியு மீந்து புறமபோக்கி - நற்கிழியில்
வாய்ந்த முருகர் வடிவழகைச் சிந்தித்துச்
சாந்தம் விபூதியெனத் தானணிந்திட் டேந்துமொழி
வள்ளைச் செவிக்கணியாய் மன்னுந் திருப்புகழ்
கிள்ளைக் கிசைப்பதனைக் கே[illegible]து - வள்ளிபுணர்
கந்தனுருக் கா[illegible]ய கண்ணுக கணியென்று
[illegible]சய நாமமே நாவணியென் - றெந்தையெதிர்
கூப்புவதே செய்கையணி கோலமென்றுங் கண்டிகையை
வாய்ப்பதுவே கொங்கையணி மாணென்றுந் - தோப்பமந்த
நீலச் சிலம்பதனை நித்தலுஞ்சூழ்ந் தெய்துவதே
காலிற் சிலம்பணியுங் காட்சியென்றும் - வேலர்
அலங்காரத் துட்பொருளை யாய்வதுவே தேகங்
கலங்கா வலங்கார மென்று - மிலகுசுகந்
தந்தாதி மேலசை யாவதுயிர்த் தோழியெனு
மந்தாதி மேலான தட்டென்றுஞ் - சந்தமுரு

சுஉ0. காற்றுப் படையே யனங்க னடுபோரை
மாற்றுப் படையாகி வைகுமென்றும் - தோற்றும்
அனுபூதி யைம்பதுமே யாருயிர் பேரின்ப
வனுபூதி நல்கு மணியென்று - மனமீதி
லுன்னும் பொழுதி லுயருக் கயிலேறிகர்
மன்னியொளிர் கந்த மாதனமுங் - கன்னியுமை
யங்கைவிர லிற்றோன்றி யன்னையுமாய்ச் சோதரியாய்த்
திங்களணிவோன் சடைவாழ் சேணதியுஞ் - சங்கணிந்த
செங்கண் மாலான சிவமுனிக்கு மான்பிணையால்
மங்கைவள்ளி தோன்றி வளர்நாடும் - பைங்குவளை
மூன்றுதி னங்கடொறு மொய்த்தபகற் போதுசுனை
தோன்று மதிசயஞ்சேர் தொன்னகரு - மேன்றரக்கர்
கட்சிதனை வேலாற் கலைந்தா ளிரைகவர்ந்து
வெட்சிப் பெயர்படைத்த வென்றுரும் - பட்சியென
மேவும்பெயர் கொண்டு மேதினியெலா மொடியிற்
றுவிவரு மஞ்ஞைநத் தனிப்பரியு - மாவினுயிர்
கன்னணிமையிற் போக்கிக் கடவுட்பிடி மணந்து
விண்ணிற் பவனிருவரும் வெண்கரியுங் - கண்ணன்
கொடிக்கு மலர்வேதன் கொடிக்கும் வலாரி
கொடிக்கு மிசைநல்கு கொடியும் - படிக்குமுருக்
சுரு0. கட்புலனிற் றோற்றுது காமினியிற் பூசுரர்க
ளுட்புலனிற் கற்றறையு மொண்முரசுந் - தட்பமலர்
வேதன் படைப்பகற்றி மீட்டும் படைத்துலகிற
நீதகலவே நடத்துஞ் செங்கோலும் - பேதமற
வோதுந் தசாங்க முடையான் மணிநெடுந்தேர்
போதவுவந் தண்ணெனவே புக்கிரைஞ்சிச் - சோதியெழில்
பாதாதி கேச பரியந்தம் பார்த்துருகு
காதாதி யாகங் கடம்பென் ... - வாதாபி
சீரணமென் றோன்செவியிற் சோந ... வாயிதமென்
வாசெவியில் ... துரைக்க மாட்டாயோ - ... ...
சந்தனத்தைப் பூ... யிரு கையலார் சந்தனம்போ
லெந்தனமுஞ் சேரி விழிவாரோ - வந்தாத்திமை
மீளுட்டுங் காமநோய் வீட்டினையின் றேர்கொடியின்
மீளுட்டுங் காமநோய் வீட்டிடாய் - நாளூட்டு
நாகப்பாம் பின்னை நயந்துணர்ந்தா லுன்னையதி
போகப்பாஞ் சாலருக்குள் முன்மொழிவேன் - சோகப்பூத்
தைத்தாவி சோர முன் சார்ந்துருக கஞ்சமெனுங்
கைத்தாவி ... யைக் கன்றிடிலே - எய்த்தேன்

துயிலைச் தடுத்தவிராத் தோன்றி னிகியேயு
[illegible] த்தடுத் திபூக்க வல்லேன் - கயிலை [illegible]றை

கூச0. மைந்தனீ யாஞெலும் வந்துகனிவாய் முத்தந்
தந்தனையேற் செவ்விளநீர் தானளிப்பேன் - கந்தனெனும்
காமம்படைத்து நயந்தெனைக் கூடாத கன்றால்
[illegible]ம பொரு [illegible] மேகல [illegible]தே - சேமத்
தணிகைத் தலமமர்ந்தாய் தண்மே [illegible] யா
டணிகைத் தலமகல்வ தாமோ - இனியமுலைக்
காம்பு சுவைத்தால் கசக்கு[illegible] யாரேனும்
வேம்பு சுவைத்தால் வெறுக்காதே - மேம்படுசீர்
நந்துபரியா சகத்தை நல்லெகன்றாள் புன்முறுவல்
தந்துபரி யாசகஞ்செய் தன்மையப்போற் - சிந்தை
தளரும் விரகச் சலதிபடி வித்துக்
குளவணயல் வீதிவழிக் கொலைடான் - களப
முலைமாத ரோரெழுவர் யோகிப்ப வென்று
முலவாச் சேய் வந்தா னுலா.

ஆடு பருவம் எ-க்கு கண்ணிகள் - கூாசஎ.

தணிகை யுலா - முற்றிற்று.

---

திருத்தணிகைச் சந்நிதிமுறை முற்றிற்று.

---

வேலும் மயிலுந் துணை.